ஸ்ரீரஸ்து.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீஸ்ரீ. ஸ்ரீமதஹோபில மடாதீச ஸ்வாமிகள் திவ்யஸன்னிதானத்திற்கு

## அறிக்கை.

---

ஸ்ரீமத்வேத மார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்ய. ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யர்களா யெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதஹோபில மடாதிபதிகளான ஸ்ரீஸ்ரீ அழகிய சிங்கர் ஸ்வாமிகளின் திவ்ய சரணாரவிந்த ஸன்னிதானத்தில் நீசனேன் நிறையொன்று மிலேன் சீலமில்லாச் சிறியன் ஸ்ரீ வைஷ்ணவதாஸன் ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கர அண்ணங்கராசார்யதாஸன் ஸப்ரணாமம் ஸவிநயம் கைகூப்பிச் செய்யும் விண்ணப்பம்.

மாதந்தோறும் வெளிவருகின்ற ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையின் முகப்பில் "ஸ்ரீ அழகிய சிங்கர் நியமநத்தால் ப்ரசுரமாகும் ஸ்ரீ அஹோபில மடத்துப் பத்ரிகை" என்றுள்ளதனால் அப்பத்ரிகை விஷயமாக அவச்யம் விஜ்ஞாபிக்க ப்ராப்த மானவிதனை ஸ்ரீஸ்வாமிகளின் பாதாரவிந்த பரிஸரத்தில் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். பரமக்ருபையுடன் கடாக்ஷித்தருளி ஆவன செய்தருள வேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

ஜகதாசார்யரான நம்பிள்ளைக்கும் ஸ்ரீமடத்திற்கும் நெருங்கின ஸம்பந்தமுள்ளதாகச் சொல்லப்படுகிறது. அப்படியிருந்தும் மடத்துப் பத்ரிகையான ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் நம்பிள்ளை தூஷணைகள் அடுத்தடுத்து வந்து கொண்டிருக்கின்றன. நிதர்சனமாக, இவ்வாவணி மாதத்தில் வெளிவந்துள்ள ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையில் பிரசுரமாகியிருக்கின்ற தூஷணை வாக்கியங்களை இதன் கீழ் எடுத்துக் காட்டுகின்றேன். அதற்கு அவதாரிகையாகச் சில விஷயங்கள் விஜ்ஞாபிக்கிறேன். சென்ற கரஹூ புரட்டாசி மாதத்தில் ஆசார்யஜயந்தி மலர் என்னும் பெயர் கொண்டவொரு சிறு புத்தகமாக வெளிவந்த ந்ருஸிம்ஹப்ரியாவில் சில விஷயங்கள் விவாதாஸ்பதங்களாக எழுதப்பட்டிருந்தன. (1) "ஸ்ரீபாஷ்யகாரரால் ஏற்படுத்தப்பட்ட ஸிம்ஹாஸநாதிபதிகள் எல்லோரும் ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹாராதகரான ஸ்ரீமதாதிவண் சடகோப யதீந்த்ர மஹா தேசிகனிடத்தில் ஸ்ரீந்ருஸிம்ஹன் நியமனத்தால் ஆச்ரயித்தார்கள்" —(2) "ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயத்திற்கே பொருந்தியிருக்கிற மூப்பத்தாறுயிரப்படி வியாக்யானத்தை ஸ்ரீ பெரிய அழகிய சிங்கர் காலக்ஷேபம் ஸாதித்தாகிறது" என்னுமிவ் விஷயங்கள் விமர்சிக்கப்படவேண்டியவைகளாக இருந்தபடியால் அப்போதே ஸ்ரீ ராமாநுஜன் தனிமலர் மூலமாய் அடியேன் விமர்சிக்க ப்ராப்தமாயிற்று. அதில் ப்ராஸங்கிகமாக * பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிற ச்ருதிவாக்யத்திற்கு நம்பிள்ளையீட்டில் அருளிச் செய்திருக்கிற இன்சுவைப் பொருளை யெடுத்துக்காட்ட நேர்ந்தது. மடத்தைச் சேர்ந்த

வர்கள் இதை உகக்கவேண்டியவர்களே யொழிய வெறுக்க வேண்டியவர்களல்லர். மடத்தில் ஈடுகாலக்ஷேபம் நடந்து கொண்டிருப்பதாக வெளியிடுமவர்கள் இதை நிந்திக்க ஸூதராம் ப்ரஸக்தி கிடையாது. அப்படியிருந்தும் மடத்தின் சார்பாக வெளிவந்த தத்வபாஷணத்தில் பக்கம் 17ல்—

" ஔபாஸநாந்தத்தில் (அக்நே நய) என்றாரம்பித்து * பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம * இத்யந்தமான அக்நி விஷயகமான உபஸ்தாநமந்த்ரம் படிக்கப்பட்டிருக்கிறது. இது ஸாக்ஷாத் பகவத்விஷயகமன்று.........இதற்கு வேறு விதமான அர்த்தம் கொண்டால் விருத்தமாக முடியும். * தே பூயிஷ்டாம் நமஉக்தி மென்று அந்வயிக்க வேணு மென்று ஆச்சான்பிள்ளை சொல்லியிருப்பரே யொழிய நம்பிள்ளை சொல்லியிருக்கவுமில்லை. இம்மாதிரியான மாயாவஸீதாவ்யாபாரம் அநர்ஹமானது "

என்றெழுதப்பட்டது. அதன்மேல் அடியேன் சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை 6-ல் —*அக்நே நய ஸுபதா* என்கிற மந்த்ரம் ஈசாவாஸ்ய ப்ருஹதாரண்யக உபநிஷத்துக்களிலுள்ளதென்று காட்டி தேசிகனருளிச் செய்த ஈசாவாஸ்ய பாஷ்யத்தில் ஸாக்ஷாத் பகவத் பரமாகவே வியாக்கியானிக்கப்பட்டிருப்பதையும், இதற்கு இன்சுவைப் பொருள் பணித்தவர் ஆச்சான் பிள்ளையல்லர், நம்பிள்ளையே என்பதையும் வ்யக்தமாக எடுத்துக்காட்டி அடியேனிடத்தில் மாயா வஸீதாவ்யாபாரமுள்ளதாக வெழுதியிருந்த மடத்துப் பண்டிதரை வாய்மாளப் பண்ணியிருக்கிறேன்.

அதற்கு மேலும் "பூயிஷ்டாம் என்று இவ்வளவே நம்பிள்ளையீட்டில் எடுத்திருக்கிறாரேயொழிய (தேபூயிஷ்டாம்) என்று அந்வயம் காட்டியெடுத்திருக்கவில்லையென்றும், அப்படி அந்வயம் கொண்டால் (தவபூயிஷ்டாம்) என்றதாகுமாதலால் நமஸ்ஸுக்கு அவச்யாபேக்ஷிதமான சதுர்த்தீகாரகம் இல்லாமற் போகு மென்றும் அது பெரிய தவறாகுமென்றும்" மடத்துப் பண்டிதரால் எழுதப்பட்டது. அதற்குமேல் அடியேன் சாஸ்த்ரார்த்த சந்திரிகை 21-ல் *உண்ணுஞ் சோறு திருவாய்மொழியில் (பா-9.) * காரியம் நல்லனகளவைகாணில் பாசுரத்தினீட்டில் "தே பூயிஷ்டா மென்றிறே அவனிருப்பது" என்று ஸுஸ்பஷ்டாந்வயம் காட்டியிருப்பதை யெடுத்துக்காட்டியும், யஜுர்வேத முதல்காண்ட முதல் ப்ரச்நத்தில் *सुवनमसि विप्रथस्व अग्ने यष्टरिदं नमः* என்றவிடத்தில் சதுர்த்தீநிர்தேசம் அடியோடில்லாமையாலே நமஸ்ஸு நியமேந சதுர்த்யபேக்ஷமென்றுகொண்டு செய்த தூஷணத்தை நிரஸித்தும் போந்தேன்.

இதற்குமேல் மடத்துப்பண்டிதர் கையொழிந்து கைகூப்பி நிற்கவேண்டியதாயிற்று. நம்பிள்ளை யருளிச்செய்த அர்த்தத்தையே முநித்ரயத் தலைவரான ஸாக்ஷாத் ஸ்வாமியென்பவரும் தமது திருவாய்மொழி வியாக்கியானத்தில் அப்படியேயருளிச்செய்திருப்பதை எடுத்துக்காட்டினேனாதலால் முநித்ரயஸம்ப்ரதாயஸ்தர்களுங்கூட இதில் வாய்திறக்க வழியில்லையாம்படி செய்தாயிற்று. ஆக இவ்வளவு ஆயிருந்தும், தங்களுடைய பங்கத்தை ஒப்புக்கொண்டு நின்றுவிடுவதா! என்கிற ஆக்ரோசத்தினால் மேன்மேலும்

ந்ருஸிம்ஹப்ரியாவில் நம்பிள்ளையைப்பற்றி தூஷணைகள் எழுதப்பட்டுவருகின்றன. * भक्त्यैरण्वप्युपहृतं प्रेम्णा भूयैव मे भवेत् * என்ற பகவத் வாக்யத்திற்கும் *தொழுது மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு எழுதுமென்னுமிது மிகை* என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்திக்கும் மிகப் பொருத்தமாக நம்பிள்ளை யருளிச்செய்த நற்பொருளை ஒரு பகவத் பக்தனும் தூஷிக்கநினையான். ஆயினும், நேர்ந்தவாதத்தில் நாம் பங்கமடைந்துவிடுகிறதா! என்றுகொண்டு மேன்மேலும் நம்பிள்ளை தூஷணை வெளியிடப்பட்டுவருகிறது. மடத்துப்பெயரால் நம்பிள்ளையை தூஷித்தால் நன்றுயிராதென்றெண்ணி D. T. தாதாசார்யரென்கிற ஸ்ரீநித்ரய மதஸ்தரொருவரை முன்நிறுத்தி அவர்பெயரால் தூஷணைகள் வெளியிடப்பட்டுவருகின்றன. பெயர் யாருடையதாயினும், தூஷணைவெளிவருவது மடத்துப்பத்திரிகையிலாதலால் இதன் அநௌசித்யத்தை ஸ்ரீஸ்வாமிகள் திருவடிவாரத்தில் விஜ்ஞாபிக்கலாகிறது. ஸம்புடம் 11, ஸஞ்சிகை 8. என்று பதிவுள்ள ஆவணி மாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கிற ப்ரகீர்ணக சீர்ஷகமான அரைபாரத்தில் (பக்கம் 52ல்) 8. பூயிஷ்டாம் என்ற தலைப்பின் கீழ் உள்ள தூஷணைகள் இவை :—

1. "இங்கு பிறர் சொல்லும் பொருள் வாக்யந்யாய விருத்தமாகையால் அப்ராமாணிக மென்பது ஸுப்ரதிஷ்டிதம்."

என்பதுதான் உபக்ரமம். நம்பிள்ளை யருளிச்செய்ததென்று நாடுநகரமும் நன்கறிந்தபொருளை 'பிறர்சொல்லும் பொருள்' என்று அநுபாஷித்ததும், அதனை வாக்யந்யாய விருத்தமென்றதும் அப்ராமாணிகமென்றதும் கவனிக்கத் தக்கது. மேலும்,

2. "நஞ்சீயர் விவரணம் வரையில் இந்த ச்ருதி உதாஹரிக்கப்படவில்லை. பிறகு முழுமந்த்ரத்தையும் பராமர்சிக்காதே ஸூயிஷ்டாம்தெ என்பதையே புத்தியில்வைத்து தவஸூக்தா ஸூயிஷ்டாம் என்று சிலர் ஆபாதமாகச் சொன்னது ..... நம்பிள்ளை திருவடிகள் இப்பொருளை நிபந்தித்தார்கள்"

3. "ஈட்டிலுள்ள தெ ஸூயிஷ்டாமென்கிற விலக்ஷணாந்வயம் ஸம்ப்ரதாயாகதமன்று, புதிதாகத் தோன்றியதே"

இப்படிப்பட்ட தூஷணவார்த்தைகள் ஜகதாசார்யரைப் பற்றியவை ஸாமாந்யமாக ஸ்ரீவைஷ்ணவ பத்திரிகையெதிலும் வெளிவரத் தகாது. விசேஷித்து மடத்துப் பத்திரிகையில் அடியோடு வரத்தகாது. "மடத்தில் ஈடு காலக்ஷேபம் ஆச்சரியமாக நடந்துவருகிறது" என்றும் "ஸ்ரீதேசிகஸம்ப்ரதாயத்திற்கே பொருந்தியிருக்கிறது ஈடு" என்றும் வெளியிட்ட பத்ரிகையானது ஈட்டிலுள்ள அர்த்ததத்வத்தை அடியேனுடைய வியாஸங்களினால் உள்ளபடி தெரிந்துகொள்ளப் பெற்றவாறே இனி ஈட்டை தூஷிக்கவேண்டியதுதான் கடமையென்று தேறி இப்படிப்பட்ட அநீதியான தூஷணைகளில் கைதேர்ந்துவிட்டதென்று உண்மையுள்ளது. மடத்துப் பத்ரிகைக்கு இப்படிப்பட்ட ஓர் அபக்கியாதி விளைந்திருப்பது ஸ்ரீஸ்வாமிகளின் தேஜஸ்

ஸூக்குத் தகாதென்று உலகம் சொல்லுகிறது. சாஸ்த்ரார்த்த ரீதியில் நம்
பிள்ளை ஸ்ரீஸூக்தி அவத்யலேசரஹிதமென்பதை வெகு விரிவாக உபபா
தித்து எழுதப்பட்டுள்ள வியாஸங்கள் இந்த விண்ணப்பத்துடன் சேர்க்கப்
பட்டிருக்கின்றன. அவற்றையெல்லாம் ஸ்ரீஸ்வாமிகள் நேரில் கடாக்ஷித்
தருள்வதோ திருச்செவி சாத்தியருள்வதோ செய்யவேணும். அவற்றால் நம்
பிள்ளைஸூக்தி மிகவும் உபபன்னமானதேயென்று திருவுள்ளத்திற்குத் தெரிய
வரும். தவறு இருந்தால் ஸ்ரீஸ்வாமிகள் அந்தரங்க கார்யஸ்தர்க்கு தத்வார்த்
தங்களை யருளிச்செய்து அவை பத்ரிகையில் பிரசுரமாம்படி செய்தருள்வது.

'யாரோ பிறர் எழுதும் தூஷணைகளைப்பற்றி எமக்கொன்றும் தெரி
யாது' என்று ஸாதிக்கத் திருவுள்ளமானால் கீழே அடியேன் எடுத்துக்காட்
டிய தூஷணைகள் மடத்துப் பத்திரிகையில் வெளிவந்ததற்கு அநுதாபம்
வெளியிடவும், இனி அப்படிப்பட்ட தூஷணையொன்றும் பத்ரிகையில் இடம்
பெறாதபடி திவ்யாஜ்ஞைசெய்தருளவும் ப்ராப்தம். இந்த விண்ணப்பத்தைக்
கடலோசையோபாதி திருவுள்ளம் பற்றி 'நடக்கிற காரியம் நடக்கட்டும்'
என்றேயிருக்க நேர்ந்தால், अथ भगवदिच्छा बलीयसी प्रमाणम् ॥

மடத்து விவாதாரம்பத்தில் அடியேன் விமர்சிக்க எடுத்துக்கொண்ட இரண்டு விஷ
யங்கள் எவ்விதமான முடிவை யடைந்தன வென்பதையும் தடஸ்தர்களுக்குத் தெரிவிக்கிறே
னிங்கு: "सर्वैराचार्यपीठस्थैः सर्वैरपि मठाधिपैः । सेविताङ्घ्रिसरोजाय मत्पित्रे नित्यमङ्गलम्" ॥ என்று ஒவ்
வொருவரும் தம் தம் திருமாளிகைக்குள்ளே கோஷிக்கத் தடையில்லாமையாலே முதல் விஷயத்
தில் விவாதப்படவேண்டாமென்று முடிக்கப்பட்டது. இனி இரண்டாவது விஷயம்—ஈடுமுப்
பத்தாறாயிரப்படி தேசிகஸம்ப்ரதாயத்திற்கே பொருந்தியதென்பது. இவ்விஷயத்தில் தான்
விவாதம் மிக வளர்ந்திருக்கிறது. 'தேசிக திவ்யஸூக்திகளுக்கே ஈடு பொருந்தியிருக்கிறது'
என்று எழுதியிருந்தால் இந்த வார்த்தையை உலகமெல்லாம் சிரஸாவஹிக்கவே ப்ராப்தமாகும்.
தேசிகன் பெரும்பாலும் நம்பிள்ளை திருவடிகளின் ஸ்ரீஸூக்திகளைப் பின்பற்றியே தாம் பல
க்ரந்தங்களை யருளிச் செய்திருக்கையாலே தேசிக திவ்யஸூக்திகளுக்கு ஈடு பொருந்தியிருக்கிற
தென்றால் விவாதமே தோன்றாது. தாங்களாகச் சில அர்த்தங்களைச் சொல்லத் தொடங்கி இது
தான் தேசிகஸம்ப்ரதாய மென்று ஆரோபமாகச் சொல்லிவருமவர்கள் தேசிகஸம்ப்ரதாயத்
திற்கே ஈடு பொருந்தியதென்றால் இது ஈஷத்தும் பொருந்தாததலால் இந்த அஸாங்கத்யம்
வெகுவிரிவாக நிரூபிக்கப்பட்டே வருகிறது. கடைசியாக மடத்து வித்வான் ஸ்ரீஉவே. புத்தங்
கோட்டம் ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி பெயரால் வெளிவந்திருந்த ஈட்டின் விமர்சம் ஸர்வாத்மநா
அஸாது வென்று ஸ்ரீபெரும்பூதூர் சிரோமணிபண்டிதரால் பரக்க நிரூபிக்கப்பட்டிருந்தது.
அதன்மேல் யுக்தமான முறையில் ஸமாதானம் சொல்லமாட்டாமல் ஓர் ஸத்தியவாதியென்று
புனைபெயரிட்டும் அச்சுக்கூடத்தின் பெயரை யொளித்தும் நிந்தைக்காகித மொன்று திருவள்
ளூர் மூலமாகப் பிரசுரமாயிற்று. அது ந்ருஸிம்ஹப்ரியாவில் சேர்க்கப்படுவதாயிருந்ததென்றும்,
அது தலைகாட்டமுடியாமல் அங்குரதசையிலேயே நிரஸ்தமானபடியால் ஹ்ருத்தாபநாசினியில்
நிக்ஷிப்தமாயிற்றென்றும் வதந்தி. இப்படிப்பட்ட விஷமச் செயல்களுக்குப் பெரியார்கள்
இடம் தரலாகாதென்னும் மனோன்களின் பிரார்த்தனையுள்ளது.

Rathnam Press, Madras

ஸ்ரீ:

# கண்ணபிரானும் குசேலமுனிவரும்.

[ப்ர—அ.]

ஸத்யஸங்கல்பனான எம்பெருமான் இந்நிலவுலகில் அவதாரங்கள் செய்யாமலே தன்னுடைய ஸங்கல்ப சக்தியினாலேயே எதையும் செய்து தலைக்கட்டிவிட முடியும். "நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்காய்" என்று நம்மாழ்வாரருளிச் செய்கிறபடி கர்மவச்யர்களான நம்போல்வாரும் படாத கஷ்டங்களை அகர்மவச்யனான தான் பட்டு எதற்காக இந்நிலத்தில் வந்து பிறக்கவேணும்? எத்தனை அஸுரராக்ஷஸர்களைக் கொல்லவேணுமானாலும் "विश्वं धियैव विरचय्य निचाय्य भूयः संजहुषः" என்று ஆழ்வானருளிச் செய்த கணக்கிலே ஸங்கல்ப மாத்ரத்தாலே அது செய்யமுடியாதா? ஸாதுபரித்ராணம் எவ்வளவு பண்ண வேணுமானாலும் "नन्वस्ति विश्वपरिपालनजागरूकः संकल्प एव भवतो निपुणस्सहायः" என்று தேசிகனருளிச் செய்கிறபடி ஸங்கல்பத்தாலே பண்ண முடியாதா? எதற்காக மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப் பிறவி பிறந்து வருந்த வேண்டும்? என்று பலர் கேட்பதுண்டு. இதற்கு நம் பூருவாசாரியர்கள் ஆச்சரியமான ஸமாதானத்தை அருளிச் செய்தேயுள்ளார்கள். துஷ்க்ருத் விநாசநம் ஒருவாறு ஸங்கல்ப ஸாத்யமானாலும் ஸாது பரித்ராணம் ஸங்கல்ப ஸாத்யமாகாதென்று ஸ்வாமியெம்பெருமானார் அனுரயிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் வ்யக்தமாக அருளிச் செய்துள்ளார். முடிவாகத் தேர்ந்த பொருள் யாதெனில், எம்பெருமான் ஸங்கல்ப சக்தியாலே செய்தருளுமளவில் ஸாது பரித்ராண துஷ்க்ருத் விநாசாதி ரூபங்களான காரியங்கள் ஒருவாறு நிறைவேறி விடுகின்றன வென்று கொண்டாலும் தன்னுடைய அற்புதமான திவ்ய கல்யாண குணங்களை வெளியிட ப்ராப்தமேயாகாது; திருக்கல்யாண குண ப்ரகாசனமே எம்பெருமானுக்கு ப்ரதானமான உத்தேச்யம். அதனை ஸங்கல்பத்தால் நிறைவேற்றவே முடியாது. அதற்காகவே அவதாரங்கள் செய்து போருவது— என்பதே. இதையே பட்டர் "गुणपरीवाहात्मनां जन्मनाम्— குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்" என்ற ஸ்ரீஸூக்தியினால் வெளியிட்டருளினார். நீர் நிரம்பின காலத்தில் ஏரிகளுக்குக் கலுங்கல் எடுத்து விடாவிட்டால் எப்படி தரிப்பு அரிதோ, அப்படியே குணபுஷ்கலனான எம்பெருமானுக்கும் அவதாரங்கள் செய்யாவிடில் குணங்களைக் கொண்டு தரிப்பு அரிது என்பது காட்டப்பட்டது. இது தோன்றவே ஸ்ரீராமாயணத்தின் ஆரம்பமே "को न्वस्मिन् सांप्रतं लोके गुणवान् कश्च वीर्यवान्। धर्मज्ञश्च कृतज्ञश्च सत्यवाक्यो दृढव्रतः ॥" இத்யாதி குண ப்ரச்நமாகவே நிகழ்ந்திருக்கின்றது. ஸ்ரீராமாயணாதி இதிஹாஸ புராண ப்ரவசனம் செய்தருளும் மஹான்களும் கதா ஸந்தர்ப்பங்களில் முக்கியமான நோக்கு வையாதே ஆங்காங்கு ஆவிஷ்க்ருதமாகின்ற திருக்குணங்களிலேயே தாங்களுமுருகி ச்ரோதாக்களையும் உருக்குகின்றார்கள்.

* ராமராவணயோர் யுத்தம் ராம ராவணயோரிவ * என்னும்படி இராம னுக்கும் இராவணனுக்கும் ப்ரபல யுத்தம் நடந்ததென்று இதைப் பல ஸர்க்கங் களால் வான்மீகி முனிவர் பெருக்கிப் பேசினாலும் * பொல்லா வரக்கனைக் கிள்ளிக் களைந்தானை யென்று பேசலாம் படியான மஹாவீரன் ஒரு புழுவோடே போராடினதில் வியப்பார் ஆரேனு முள ரோ? அந்த ஸந்தர்ப்பத்தில்

* यो वज्रपाताशनिसन्निपातान्न चुक्षुभे नापि चचाल राजा। स रामबाणाभिहतो भृशार्तः चचाल चापं च मुमोच वीरः *

என்னும்படி நிசாசரர் கோமான் நிலை கலங்கி நின்றபோது

"गच्छानुजानामि रणार्दितस्त्वं प्रविश्य रात्रिञ्चर-राज! लङ्काम्। आश्वास्य निर्याहि—

இன்று போய் நாளைவா" என்று பெரு மாள் திருவுள்ளமிரங்கி விடைகொடுத்து விட்டாரே! இந்த திருக்குணம் என்னே என்னே! என்று இதற்கு உருகுகிறார் களே தவிர, சரமாரி பொழிந்த சேவகத் திற்கு உருகுவார் ஒருவருமிலரே. கூரத் தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில்—

"यत्तादृशागसमरिं रघुवीर! वीक्ष्य विश्रम्यतामिति मुमोचिथ मुग्धमाजौ। कोऽयं गुणः कतरकोटिगतः कियान्वा कस्य स्तुतेः पदमहो बत कस्य भूमिः!"

என்ற ச்லோகத்தினால் இந்தத் திருக் குணத்திற்கு உருகுந்திறம் மரங்களு மிரங் கும் வகையன்றோ அமைந்துளது. திருநா வீறுடைய பிரானை திருமங்கையாழ் வார் * சுரிகுழற் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கன்* என்னும்படி நின்ற மஹாபாபியான இரா வணனை உடனே தொலைத்தொழித்துத் திரும்பவேண்டியிருக்க, 'रणार्दितस्त्वम्' என்று திருவுள்ளத்தில் புண்பாடு காட் டுவதும், (आश्वास्य என்று) உடம்புக் குத் தேற்றரவுசெய்துகொள் என்பதும், 'गच्छानुजानामि' என்று வீட்டுக்குச் செல்ல விடை கொடுப்பதும் குணரஸிகர்களின் நெஞ்சை நீராயுருக்கக் கேட்க வேணு மோ?

ஸ்ரீ ராமாவதாரத்தில் காட்டின திருக் குணங்களிற் காட்டிலும் மிகச் சீரியவை க்ருஷ்ணாவதாரத்தில் காட்டின திருக்கு ணங்கள். நம்மாழ்வார் * பிறந்தவாறும் வளர்ந்தவாறும் * என்று சொல்லி ஆறு மாஸம் மோஹித்திருந்தது இவ்வவதாரத் திலே யன்றோ. க்ருஷ்ணாவதாரத்தில் எந்த கதாஸந்தர்ப்பத்தை யெடுத்துக் கொண்டாலும் ஆச்சரியமான திருக்கு ணம் விளங்கியே தீரும். இளம்பிராயக் கதைகள் நிற்க. யௌவன பிராயக்கதை களில் குசேல முனிவர் வந்துசேருங் கா லத்துக்கதை மிக ரமணீயமானது. இது ஸ்ரீ பாகவதம் தசமஸ்கந்தத்தில் 80, 81 அத்யாயங்களில் உள்ளது. குசேலோ பாக்யானம் அறியாதாரில்லை, அனைவரு மறிந்ததே. குசேல முனிவரை நோக்கிக் கண்ணபிரான் கூறும் வார்த்தைகளில் ஒன்றையே இங்கெடுத்துக்கொண்டு ரஸா நுபவம் செய்ய விரும்புகிறோம்.

கண்ணனைக் காணச் சென்ற குசேலர் கையில் அவல் கொண்டுபோயிருக்கிறார். அதுவும் அவருடைய கந்தைத்துணியில் தங்காமல் கொட்டிப்போய்ச் சில கணங் களே தங்கியிருக்கலாயிற்று. அதையும் கொடுக்க லஜ்ஜித்திருக்கிறார். கண்ணபி ரானோ "किमुपायनमानीतं ब्रह्मन्मे भवतो गृहात्— கிமுபாயநமாநீதம் ப்ரஹ்மந் மே பவதோ க்ருஹாத்" = ஐயா! உம் அகத்திலிருந்து எனக்கு என்ன உபஹாரம் கொணர்ந்தீர்? என்று மடிபிடித்துக் கேட்கிறான். இன் னது கொணர்ந்தேனென்று கூறுவதற்கு நா எழும்பவில்லை. கொணர்ந்த அற்ப வஸ்துவை என்னவென்று கூறுவது!

என்னவென்று கொடுப்பது ! என்று தடுமாறி நிற்கிறார் பாவம்! அந்த ஸங்கோசத்தை யறிந்துகொண்ட கண்ணபிரான் அப்போது கூறுகின்றான்—

"अण्वप्युपाहृतं भक्तैः प्रेम्णा भूर्यैव मे भवेत्।
भूर्यप्यभक्तोपहृतं न मे तोषाय कल्पते ॥

அண்வப்யுபாஹ்ருதம் பக்தை: ப்ரேம்ணா பூர்யேவ மே பவேத், பூர்யப்யபக்தோபஹ்ருதம் ந மே தோஷாய கல்பதே." என்று. பக்திமான்கள் அணுவளவு இட்டாலும் அது அன்பின் கனத்தாலே என் புத்திக்கு மிகப் பெரிதாகவே தோற்றும்; அன்பிலாதார் மிகக் கனக்க இட்டாலும் அதனால் நெஞ்சு கனியேன்— என்பது இந்த ச்லோகத்தின் பொருள். இதனால், பகவான் பக்தர்களிடத்துக் கடுகையும் மலையாகக் கொள்ளுமியல்வினன் என்பது பெறப்படும்.

கீதையில் ஒன்பதாமத்யாயத்தில் கூறியுள்ள "பத்ரம் புஷ்பம் பலம் தோயம்" என்ற ச்லோகமும் இந்த ப்ரகரணத்தில் கண்ணனால் பூர்த்தியாகக் கூறப்பட்டிருக்கின்றது. அந்த ச்லோகத்தின் கடைசி பாதம் 'அச்நாமி ப்ரயதாத்மந:" என்பது. இவ்விடத்து கீதாபாஷ்யத்தில் எம்பெருமானார் அருளிச் செய்வதாவது—

"मनोरथपथदूरवर्ति प्रियं प्राप्येव अश्नामि"

என்று. அவாப்த ஸமஸ்தகாமனான எனக்கும் கிடைக்கமாட்டாததானவொரு ப்ரியவஸ்து கிடைத்தாற்போல் அநுபவிக்கிறேனென்று எம்பெருமான் சொல்லுவதாக பாஷ்யமுள்ளது. ஸம்ஸ்க்ருதஜ்ஞர்கள் அவ்விடத்து பாஷ்யபங்க்தியை யெடுத்து ஸேவித்தால் கண்ணநீரைப் பெருக்காமலிருக்க முடியாது. அணுவையும் அமிதமாகக் கொள்ளும் பரிசு தனக்குள்ளதென்பதைக் கண்ணபிரான் இங்கு [குசேலகதையில்] மேலே வெகு ரஸமாகக் காட்டுகிறான். குசேலரை நோக்கிக் கண்ணன் இங்ஙனே சொல்லச் செய்தேயும் அவர் வெட்கத்தினால் அவலைக் கொடுக்கவேயில்லை. கண்ணன் தானாகவே அவருடைய சதச்சித்ரமான உத்தரீய முடிப்பைப் பிடித்திழுக்க, சில அவல் துளிகளே கைப்பட்டனவாம். ஆனாலும் "அண்வபி பூர்யேவ மே பவேத்" என்று கீழே சொன்னது ப்ரத்யக்ஷமாக வேணுமே; அதற்காக, அந்த அவல் கணங்களும் கண்ணன் கைப்பற்றினவாறே முஷ்டியளவாக ஆயிற்றும். அதை அமுது செய்ய, அவ்வளவிலும் அது ஓய்ந்ததில்லை; மற்றொரு முஷ்டியாகவும் பெருகிற்றும். இவ்வதிசயம் (ஸ்ரீ பாகவதத்தில்)

"इति मुष्टिं सकृज्जग्ध्वा द्वितीयं मुष्टिमाददे"

"இதி முஷ்டிம் ஸக்ருஜ் ஜக்த்வா த்விதீயம் முஷ்டிமாததே." என்பதனால் தெரிவிக்கப்படுகிறது.

எவ்வளவு இட்டாலும் த்ருப்தி யடையாதே 'என்ன கொடுத்தாய், உன்னைப் போன்ற க்ருபண சிரோமணியும் உலகிலுண்டோ?' என்று தூற்றும் நம்போல்வாரைப் போலன்றியே அல்பஸந்துஷ்டன் எம்பெருமான்— என்னும் இம்மஹாகுணத்தை எம்பெருமான் தன்னுடைய உக்திகளாலும் நடத்தைகளாலும் விளங்கக் காட்டிக் கொண்டிருப்பதை அஸூயையின்றிக்கே அநுபவிக்குங் குடியிலே ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவப்பயனாக நாம் பிறந்திருக்கிறோம். இத்தகைய மஹாகுணத்தை ஒருவர் எடுத்துரைத்தால் "கேசவனைப்பாடவும் நீ கேட்டேகிடத்தியோ" என்கிறபடியே ஆனந்தமாகக் கேட்டுக்கொண்டிருக்க வேண்டுவது பக்தியுக்தர்களின் லக்ஷணம்.

கண்ணபிரான் அர்ஜுநனுக்கு கீதை முழுவதும் உபதேசித்து விட்டு முடிவில்

“इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन।
न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति”

நான் உனக்குச் சொன்ன இந்த பரமகுஹ்யமான சாஸ்த்ரத்தை அதபஸ்கனுக்குச் சொல்லாதே, அபக்தனுக்குச் சொல்லாதே, அசுச்ரூஷுவுக்குச் சொல்லாதே, என்னிடத்தில் அஸூயை யுள்ளவனுக்குச் சொல்லாதே யென்று கட்டளையிடுகிறான்; இங்கு “ந ச மாம் யோப்யஸூயதி” என்றவிடத்திற்கு நம் பாஷ்யகாரர் பாஷ்யமிட்டருளுகிறார்; காணக் கண்ணாயிரம் வேண்டும்; கேட்கக்காதாயிரம் வேண்டும்; நவில நாவாயிரம் வேண்டும்;

“मत्स्वरूपे मदैश्वर्ये मद्गुणेषु च कथितेषु यो दोषमाविष्करोति न तस्मै वाच्यम्”

என்று பாஷ்யஸூக்தியுள்ளது. ‘என்னுடைய ஸ்வரூபத்தையும் என்னுடைய ஐச்வர்யத்தையும் என்னுடைய குணங்களையும் ஒருவர் எடுத்துரைத்தால் அவற்றில் தோஷாவிஷ்கரணம் செய்பவனே என்னிடத்தில் அஸூயை கொண்டவன்; அவனுக்கு நீ ஒன்றும் சொல்லாதே. என்று கண்ணபிரான் கட்டளை யிடுவதாக ஸ்வாமி பாஷ்யம் செய்தருளுகிறார். பகவத் குண கீர்த்தனம் பண்ணினால் அதில் தோஷாவிஷ்கரணம் செய்பவர் யார்? “கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளே வையும்சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன்” என்றுநம்மாழ்வாரால் விசேஷிக்கப்பெற்ற சிசுபாலன் போல்வார்— என்று இதுவரையில் எண்ணியிருந்தோம். அது தவறு; எம்பெருமானார் தர்சனத்திலேயே ஜனித்து, எம்பெருமானை அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணைகதாநனென்றும் இசைந்து வைத்து,

“நம் போல்வாரிடத்து நம: என்கிற உக்தி மாத்ர முண்டானாலும் அது எம்பெருமானுக்கு பூயிஷ்டமாகிறது”

என்று இந்த மஹா குணத்தைச் சொன்னவாறே கண்கள் சிவந்து தாபம் மிகுந்து வாஉ யுத்தஸந்நத்தர்களாகின்றார்களே சில மஹாநுபாவர்கள், அவர்களே * மத்குணேஷு கதிதேஷு தோஷமாவிஷ்கரோதி யென்ற எம்பெருமானார் திவ்ய ஸூக்திக்கு இலக்கானவர்களென்று திண்ணமாக எண்ணத்தட்டுண்டோ?

* ஹூயிஷ்டாம் தெ நமஉக்திம் விதெமஃ * என்கிற வாக்யம் ஈசாவாஸ்யாதிகளான உபநிஷத்துக்களில் உள்ளதாகையாலும் தேசிகாதிகளால் பகவத் பரமாகவே வ்யாக்கியாதமாகையாலும் இது எம்பெருமானைப் பற்றியதன்றென்று வாய் திறக்கவழியில்லை. ‘தே பூயிஷ்டாம் நம உக்திம்’ என்று அந்வயித்து, நம: என்கிற உக்தி மாத்ரமும் அவன் திருவுள்ளத்தாலே கனத்ததாகிறது என்று அர்த்தம் செய்தால் இது எம்பெருமானுக்குப் பொருந்தாத குணமென்று சொல்லமுடியுமா? சப்தசக்தியால் லப்யமாகாது என்னமுடியுமா? எதுவும் முடியாது.

“சுணுவி: ஹூமெப-ல்வ ஜெ ஹவெசு” என்னு மெம்பெருமானுடைய திருவுள்ளத்திற்கும் இயல்பிற்கும் மிக விணங்கினதாய் பகவத் குணைகிசய குதூஹலிகளுக்குப் பரமானந்த ஸந்தோஹ ஸந்தாயகமாய் சப்தஸ்வரஸத: ப்ராப்தமுமாயிருக்கின்ற இந்த மஹார்த்தத்தை—நம்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளுள் மஹாநிதியான அர்த்தத்தை நம்பிள்ளையைப்போற்றுங் குடியினின்று தோன்றும் பத்ரிகை அநுவாதாநர்ஹமான வார்த்தைகளாலே தூஷித்துக் கொண்டிருப்பதையே விரதமாகக் கொண்டிருக்கின்றதென்றால், ஹஞெ ந வஸா வத்ரா நிரவஸநீயா, சுவி தூ மொவநீயெதூழு ॥

ஸ்ரீ:

# கண்ணனும் விதுரனும்.

[ப்ர—அ.]

பாண்டவர்க்காய்த் தூதுசென்ற கண்ணபிரான் விதுரர் திருமாளிகையிலே புக்கவாறே "முன்னமே துயின்றருளிய முதுபயோததியோ, பன்னகாதிபப்பாயலோ பச்சையாலிலையோ, சொன்ன நால்வகைச் சுருதியோ கருதி நீ யெய்தற்கு; என்னமாதவம் செய்ததிச் சிறுகுடிலென்ருன்" (வில்லிபாரதம்) என்றபடி பலவிதமாக நைச்சியாநுஸந்தானம் செய்து விதுரர் கண்ணனுக்கு ஏதோவுண்ணக் கொடுத்தார்; கண்ணனும் அதனைப் பரமானந்தமாக்வுண்டான் என்று உலகம் சொல்லிவருகிறது. இவ்விடத்தை மஹாபாரதத்தில் எழுதுகின்ற வ்யாஸபகவான் எங்ஙனே யெழுதினுனென்று சிறிது பார்ப்போம். விதுரர் அன்னமிட்டாரென்பதைச் சொல்லுமிடத்து "विदुरोऽन्नमुपाहरत्— விதுரோந்நமுபாஹரத்" என்ருர் வியாஸர்; கண்ணன் அதனையமுது செய்தானென்பதைச் சொல்லுமிடத்து "विदुरान्नानि बुभुजे शुचीनि गुणवन्ति च— விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச" என்ருர். "அப்திர் லங்கித ஏவ வாநரபடை:" என்ற ரீதியிலே நின்று புராணப்ரஸங்கம் செய்து போருமவர்கள் 'விதுரர் அன்னமிட்டார்; அது பரமபரிசுத்தமாயும் பரம போக்யமாயுமிருந்தபடியாலே அதனைக் கண்ணனமுது செய்தான்' என்றிவ்வளவே சொல்லிப் போவர்கள். விதுரர் அன்னமிட்டாரென்பதைச் சொல்லும்போது "அந்நம் உபாஹரத்" என்று ஏகவசநப்ரயோகம் செய்த முனிவர் உடனே கண்ணனமுது செய்ததைச் சொல்லுமிடத்து 'அந்நாநி புபுஜே' என்று பஹுவசநப்ரயோகம் செய்ததேன்? என்று ஆராய்ந்து நிதியெடுத்து ஊட்டவல்லவர்கள் மிகச் சிலரே. விதுரர் அன்னமிட்டபோது அது மிகவும் அல்பமாயிருந்ததென்பதைக் காட்ட அங்கு ஏகவசநப்ரயோகம் பண்ணினுர். அதுதானே "அண்வபி ப்ரேம்ணு பூர்யேவ மே பவேத்" என்ற கண்ணபிரானுடைய திருக்கைத்தலத்தில் சேர்ந்தவாறே அநல்பமாய் விட்டதென்பதைக் காட்ட அங்கு 'அந்நாநி புபுஜே' என்று பஹுவசநப்ரயோகம் பண்ணினுர்—என்று மருமமறிந்து எடுத்துரைக்க வல்லவர்கள் யாராயிருக்க வேண்டும்? பகவத் குணஸாகரத்தில் நன்கு படிந்தவர்களாய் பகவானுடைய விசேஷ கடாக்ஷத்திற்குப் பாத்ரபூதர்களாய் அவனுடைய திருக்குணங்களையே ஜ்வரஸந்நிபதிதரைப் போலே வாய்வெருவுமவர்களாயிருக்கவேண்டும்.

"இக்கருத்தையுட்கொண்டுதான் வியாஸர் சுலோகமியற்றினுரோ? ஏதோ ச்லோகம் கூடுகிறபடி சொல்லிவைத்தார்; அதற்கு இப்படி விசேஷார்த்தம் சொல்லுவது குநிஷ்டை" என்று ஸஹஸா சொல்லிவிட வல்லவர்கள் எங்கும் பரம்

பியுள்ளார்களென்பதை நாமறிவோம். 'விதுரோங்நமுபாஹரத்' என்றதற்குப் பொருந்த 'புபுஜே விதுராங்நம் தத்' என்று ச்லோகமியற்ற அருமையில்லை. "ஜாமாதா வேத்தி நோ பிதா ......வ்யாக்யாதா வேத்தி நோ கவி:" என்ற கணக்கிலே வ்யாஸர் இவ்விசேஷப்பொருளைக்கருதிற்றிலர் என்றே கொண்டாலும் இந்த இன்சுவைப் பொருளைக் கொள்ளக் குறைவில்லாதபடியன்றோ வசநஸந்தர்ப்பம் அமைந்திருக்கின்றது. பகவானுடைய ஆச்சரியமான குணவிசேஷமன்றோ குன்றிலிட்ட விளக்காகின்றது இப் பொருட்சுவையில்.

"கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடிநின்று" (ஸ்ரீ வசநபூஷணம்) என்கிறபடியே கட்கிலியான எம்பெருமானை நாம் ஸாக்ஷாத்கரித்து அநுபவித்து ஆனந்திக்க பாக்கியம் பண்ணிற்றிலோம். "கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்திருப்பேனே" என்று ஆண்டாளருளிச்செய்த கட்டளையிலே குணாநுபவம் பண்ணிப் போதுபோக்க நிற்கிறோமத்தனை. இந்த குணகீர்த்தனமும் எம்பெருமானார் தர்சனஸ்தர்களுக்கும் அஸஹ்யமாகிறதென்றால் இதனில் மிக்கோர் வியப்புண்டே? பக்தனிட்ட அல்பமான அன்னம் ஸ்வீகர்த்தாவின் திருவுள்ளத்தால் அநல்பமாயிற்று என்று ஒரு குணரஸிகர் உபந்யஸித்தால் இதில் அநுபபத்திகளைக் கூற வழிதேடுவாருளரோ? * தே பூயிஷ்டாம் நமஉக்திம் * என்பதைப் பழிக்கப்பார்க்குமவர்கள் இங்கு வாளாவிருப்பர்களோ? 'நாம் கனக்க இட்டாலுங்கூட அதில் குற்றங்குறைகண்டு தள்ளுகிறவனன்றோ பகவான்' என்பதையே ரஸவநமான பொருளாகக்கொண்டு இதனையே சிஷ்யகோஷ்டிகளுக்கு ப்ரவசனம் செய்து க்ருதக்ருத்யராமவர்களை நிரோதிப்பாருமிலரே.

ஸ்ரீ:

# ந்ருஸிம்ஹப்ரியா ஸஞ்ஜீவிநீ.

[ஸ்ரீ. மெ. ஸ.]

சென்ற புரட்டாசி மாதத்தில் அங்குரித்த மட விவாதத்திற்கு அப்த பூர்த்தியுமாகப் போகிறது. இப்படி எத்தனை அப்தபூர்த்தியாகுமோ அது எம்பெருமான் திருவுள்ளமறியும். விவாதம் அங்குரித்த நாள் தொடங்கி இன்றளவும் பிரசுரமாகியுள்ள உபய வர்க்க வெளியீடுகளையும் பெரும்பாலும் விமர்சித்து மத்யஸ்த மண்டனம் என்றொரு பெரிய நூலை ஒரு ஸஹ்ருதயர் அதி ரமணீயமாக எழுதி அனுப்பியுள்ளார். அது விரைவில் அச்சாகி வெளிவரும்.

இப்போது நமது பார்வைக்குக் கிடைத்திருக்கிற ஆவணி மாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில் சாஸ்த்ராநுபந்தப் பகுதியில் வெளிவந்துள்ள விஷயங்களை இங்கு நாம் விமர்சிக்கிறோம். இதில் * பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம * என்னுமுபநிஷத் வாக்யத்தின் அர்த்தமாக நம்பிள்ளை யருளிச்செய்த இன் சுவைப் பொருளை தூஷித்தெழுதியிருக்குமவற்றை முந்துற முன்னம் விமர்சிக்கப் புகுகின்றோம்.

இவ் வுபநிஷத் வாக்யத்திற்கு நம்பிள்ளை யீட்டில் பரமரஸமான பொருள் அருளிச் செய்யப்பட்டிருக்கிறதென்று அண்ணா ஸ்வாமி எடுத்துக் காட்டியிருந்தார். அவ்வர்த்தத்தை (வைகுண்டவாஸியான) ஸ்ரீ வாஸுதேவாசார்ய மஹர்ஷி முதலான ப்ராமாணிக ப்ராஜ்ஞர்கள் பெரிய நிதி கிடைத்ததாக வெண்ணி மகிழ்ந்து புகழ்ந்து போந்தார்களென்பது நிர்விவாதமான விஷயம். அது நிற்க. பகவத்குணவிலர்களும் ரஸிகர்களுமான அபிஜ்ஞர்கள் அவ்வர்த்தத்தை அபூர்வார்த்த லாபமாகக் கொண்டு ரஸிக்க வேண்டுமே யொழிய இதில் வாத யுத்தத்தை வளர்த்த ப்ரஸக்தியே கிடையாது. க்ஷுத்ர கரணர்களும் க்ஷுத்ரோபகரணர்களுமான சேதநர்களின் ப்ரவ்ருத்திகளை அஸத்கல்பமாக்கி எம்பெருமானுடைய திருவருளையே ஸகலஸுக்ருதங்களுக்கும் தலையாக வைத்து அர்த்த நிர்வாஹங்கள் செய்து போருமவர்கள் எம்பெருமானார் முதலான நம் பூருவாசார்யர்களனைவரும். அன்னவர்களில் நம்பிள்ளை தலைமையான ஸ்தானம் வஹிப்பவர். அவருடைய அமுதிலுமாற்ற வினிய மஹோபந்யாஸங்களில் இவ்வர்த்தந்தானே உயிராகி நிற்பது. திருவாய்மொழி மூலத்திலேயே * தொழுது மாமலர் நீர் சுடர் தூபங் கொண்டு எழுதுமென்னு மிது மிகையாதலின் * என்றும், * வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற வென்னை யொழிய என்னில் முன்னம் பாரித்துத், தானென்னை முற்றப் பருகினான் * என்றுமுள்ள பல பாசுரங்களில் நம்பிக்கை யுள்ளவர்கள் நம்பிள்ளை திருவடிகளையே தஞ்சமாகப் பற்றி நிற்பர்கள். * செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே * என்று பணித்து, திவ்ய ப்ரபந்தங்களைக் கொண்டே தெய்வ வடமொழியுபநிஷத்துக்களின் பொருள்களையும் தெளிய உணர்ந்து கொள்வதாக

ஸ்வாநுபவத்தை வெளியிட்ட தூப்புல்பிள்ளைக்கும் நம்பிள்ளை வழியாக வந்த அர்த்த விசேஷங்களில் உகப்பு தவிர வெறுப்பிருக்க ப்ரஸக்தி யில்லை. தெளியாத மறைநிலங்களென்று சொன்னது அர்த்தமில்லாத வார்த்தையன்றே. உபநிஷத்துக்கள் கலங்கின பொருளையே தருமென்றும் திவ்யப்ரபந்தங்களைக் கொண்டே அதைத் தெளிவித்துக் கொள்ளுகிறோமென்றும் தேசிகர் கூறியிருப்பதானது அவிச்சிந்ந பரம்பரையாய் அவருடைய ஸம்பந்தம் பெற்றிருப்பவர்களுக்கன்றோ ருசிக்கும். *புதுத் தெய்வம் கொண்டாடுந் தொண்டர்* என்னும்படி ஒன்றிரண்டு நூற்றாண்டுகளாகவே தேசிக ஸம்பந்தத்தையும் தத் பக்தியையும் ஏறிட்டுக் கொண்டவர்களுக்கு இன்னமும் திவ்ய ப்ரபந்தங்களில் த்வேஷம் நாபியிலூறிக் கிடக்கையாலே தெளிபொருள்களில் அபிநிவேசம் எங்ஙனே யுண்டாகும்? ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகள் வரையிலுள்ள ஸகலாசார்யர்களுமே திவ்யப்ரபந்தங்களைக் கொண்டு உபநிஷதர்த்தங்களைத் தெளிந்து கொண்டவர்களாயினும் அந்தப் பெருமையை வாய்விட்டுச் சொல்லிப் பாசுரம் பாடி வைத்தவர் தேசிகர் ஒருவரே யாவர். ஆசார்ய ஹ்ருதயத்தில் "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்" இத்யாதி சூர்ணைகள் இருந்தாலும் "செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்ற பாசுரம் பணித்த பெருமை தேசிகரொருவர்க்கே அஸாதாரணமாகும்.

அங்ஙனம் பணித்த தேசிகரை உண்மையாக வழிபடுகின்றவர்களுளரேல் அவர்கள் செய்யவேண்டிய முதற்காரியம் ஒன்றுண்டு; அதாவது, "தெளியாத மறைநிலங்கள் இவை யிவை; செய்ய தமிழ் மாலைகளைக் கொண்டு தெளியப் பெற்றவை இவை யிவை" என்று இரு வகுப்பிட்டு விவரிப்பதுதான். திவ்யப்ரபந்த ரூப ப்ரபல ப்ரமாண சரணர்களாய்க் கொண்டு அப்படி விவரிக்க வல்லவர்கள் நாலைந்து பொருள்களையாவது விவரிக்கப் புகுந்தால், *பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம* என்ற தெளியாத மறை நிலத்திற்கு, "தொழுது மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு எழுதுமென்னு மிது மிகை" என்கிற செய்ய தமிழ் மாலையைக் கொண்டு நம்பிள்ளை தெளிவித்த நற்பொருளையே முதலணியில் நிறுத்தப்ராப்தமாகு மென்பதில் ஐயமுண்டோ? திருவாய்மொழி மூலத்தில் ஏறிட்டுக் கொள்ள வேண்டாதபடி சாப்தமாகக் கிடைக்கிற பொருள்தானே இது. भक्तैरण्वप्युपहृतं प्रेम्णा भूर्येव मे भवेत्– பக்தைரண்வப்யுபஹ்ருதம் ப்ரேம்ணா பூர்யேவ மே பவேத்* என்று பகவான் தானே கூறியுள்ளான். பக்தர்களிடத்து ஒரு கடுகையும் மலையாகக் கொள்வேன் நான் என்று கூறியுள்ள பகவானுடைய அபிப்ராயத்தை மாற்றுவதற்கு ஒருவராலாகுமோ? அன்னவனுக்கு நம உக்தியானது பூயிஷ்டமாகிறதென்றால் இதை ஒரு பகவத் பக்தன் இல்லை செய்ய வல்லனோ?

ஒருவன் மற்றொருவனிடத்தில் மஹத்தான த்வேஷம் கொண்டிருந்தானும். அதனால் அவன் வாயிலிருந்து எது வந்தாலும் அதைக் கண்டித்தே தீர்வதென்று விரதம் கொண்டிருந்தானும். 'தவ மாதா ஸாத்வீ' (உன் தாயார் உத்தமையான பதிவிரதை) என்று அவன் சொன்னாலும் அதையும் கண்டிப்பனுமிவன்; 'என் தாயின் செய்தியை நீ கண்டாயோ? ஸ்வைரிணிகளில் தலைவிகாண்' என்பனும். இது

விநோத கதையாகச் சொல்லப் படுவதென்று எண்ணியிருந்தோம். மெய்யே யாயிற்று. பகவத் குணோத்கர்ஷமொன்றிலேயே த்ருஷ்டி வைத்து நம்பிள்ளை யருளிச் செய்யும் அர்த்த விசேஷங்களை நிர்க்குணப்ரஹ்ம வாதிகள் தூஷிப்பது ஏற்கும். எம்பெருமானார் தரிசனத்திற் படிந்து * உயர்வற வுயர்நலமுடையவன் யவனவன் * என்று கற்கவும் பெற்றவர்கள் பகவத் குணோத்கர்ஷாஸஹிஷ்ணுக்களாய் வாத யுத்த ஸன்னத்தர்களாகிறார்களென்னில் * மம மாயா துரத்யயா * என்றதையே நினைக்க வேண்டுமத்தனை.

பெரிய பரகாலஸ்வாமி யென்பாரொருவர் திருவாய்மொழிக்கு வியாக்கியான மியற்றத் தொடங்கினார் பதினெண்ணாயிரப் படியென்று பெயர் வைத்து. ஆரம்பத்திலேயே ஒரு பெரிய சுலோக மிட்டார் [ 'வ்யாக்யாநம் த்ரமிடாகமாந்தவசஸாம் யத் தாக்ஷிணாத்யை: க்ருதம்' இத்யாதி. ] அதன் பொருள் யாதெனில்; திருவாய்மொழிக்குத் தென்னாசார்யர்கள் செய்துள்ள வியாக்கியானம் ஸ்ரீபாஷ்யாதி விருத்தமாகவே யிருந்தாலும் அதில் ரஸகனமான அர்த்தங்கள் பல இருப்பதால் அந்த வ்யாக்கியான பங்க்திகளைக் கொண்டே என்னுடைய வியாக்கியானத்தை நிரப்புகிறேன் - என்பதாம். இந்த ப்ரதிஜ்ஞையின்படி ஈட்டுப் பங்க்திகளை அப்படியப்படியே எழுதிவைத்திருக்கிறார். அது தமிழிலும் தெலுங்கிலும் அச்சாகியிருக்கிறது. தம்முடைய மதத்திற்கு விருத்தமான அம்சங்களையும் அவர் ஈட்டு ஸ்ரீஸூக்தி ஸ்வாரஸ்ய வ்யாமுக்தராய் அப்படியே பலவிடங்களில் எழுதி வைத்தார். சிலவிடங்களில் கண்டனமு மெழுதுகிறார். * பிரிவகையின்றி நன்னீர் தூய் புரிவதுவும் புகை பூவே * என்றவிடத்து ஈட்டில் நஞ்சீயர்க்கும் பட்டர்க்கும் நடந்த ஒரு ஸம்வாதம் நிபந்திக்கப் பட்டிருக்கிறது. அது பகவத் குணோத்கர்ஷ ப்ரதிஷ்டாபனத்தில் சேருமதென்று சிறியாருமறிவர். அந்த ஸம்வாதத்தை வாசிக்கும் போதும் உபந்யஸிக்கக் கேட்கும்போதும் மதாந்தரஸ்தர்களுங் கூட மெய் சிலிர்க்கக் காண்கிறோம். அப்படிப்பட்ட ஸம்வாதத்தை அந்த பதினெண்ணாயிரப் படிக்காரர் தூஷிக்கத் தலைப்பட்டார். 'எங்களுக்கு ஈடு உண்டு' என்று கண்டாதுபரி (कण्ठादुपरि) சொல்லிக்கொள்ளும் ஏகதேசிகளும் ஸ்வகோஷ்டிகளில் அந்த (பதினெண்) வியாக்கியானத்தையும் ப்ரவசனம் செய்வதும், அதிலுள்ள தூஷணங்களை ப்ராமாணிக மென்பதுமாய்க் காலம் கழித்து வருகிறார்கள். இதுவொரு ப்ரபல பாப பலமென்று தவிர வேறொன்றும் சொல்லத் தகாது.

அந்த மஹான்கள் * பூயிஷ்டாம் தே நம உக்தி மென்கிற ப்ரக்ருத விஷயத்தில் எவ்விதமாக நடந்து கொள்ளுகிறார்களென்பதைச் சிறிது மூதலிப்போம். முதலில் இந்த உபநிஷத் வாக்ய மிருக்குமிடத்தையே அறியாதாராய், இது ஔபாஸந மந்த்ரம், ச்ராத்த மந்த்ரம், உபஸ்தான மந்த்ரம்; இதற்கு பகவத்பரமாக அர்த்தம் செய்ய ஔசித்ய லேசமும் கிடையாது; அப்படி நம்பிள்ளை ஓரிடத்திலும் அருளிச் செய்ததும் கிடையாது— என்று வெகு ஸாஹஸமாக எழுதினார்கள். பிறகு * வேங்கடத்துறைவார்க்கு நம வென்னலாங்கடமையது சுமந்தார்கட்கே * என்றவிடத்து ஈட்டுப் பங்க்தியை யெடுத்துக் காட்டின பின், "தே பூயிஷ்டா மென்கிற அந்வயத்தை நம்பிள்ளை திருவுள்ளம் பற்றவேயில்லை; அரும்பதவுரைகாரர்கள் ஏறிட்டதே யிது" என்றெழுதினார்கள். பிறகு * உண்ணுஞ் சோறு பருகுநீர் திருவாய்மொழியினீட்டில் நம்

பிள்ளை "தே பூயிஷ்டாம்" என்றே யெடுத்துக் காட்டி யிருப்பதை நிதியெடுத்துக் காட்டுமா போலே ஸ்ரீஸ்வாமி யெடுத்துக் காட்டின பின் வாய்மாண்டு கைகூப்பி நிற்கவேண்டியதாயிற்று. ஆனாலும் பகவத்குணோத்கர்ஷாஸஹிஷ்ணுதையும் நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி வித்வேஷமும் ஸஹவாஸதோஷத்தால் பல வருஷங்களாக ஊர்ஜிதமாயிருக்கையாலே ஈட்டை தூஷிக்க வேணுமென்றும் அபிநிவேசமே தலையெடுத்து ஸாக்ஷாத்தாக தூஷிக்கத் துணிவின்றியே முநித்ரய ஸம்ப்ரதாயஸ்தரொருவர் (D. T. தாதாசார்யர்) தூஷிப்பதாக வைத்து அவரை ஆளாக்கி யிருக்கிறார்கள். தூஷணைகள் அவர் பெயரால் வெளிவந்தாலும் அவற்றை மடத்துப் பத்திரிகையான ந்ருஸிம்ஹப்ரியைதான் தாங்கி நிற்கிற தென்பதை உலகமுணரும். இவ்வாவணி மாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில் வெளி வந்திருக்கின்ற தூஷணைகள் எப்படிப்பட்டவை யென்னில், 'பூயிஷ்டாம்' என்று மகுடமிட்டு "இங்கு பிறர் சொல்லும் பொருள் வாக்ய ந்யாய விருத்தமாகையால் அப்ராமாணிக மென்பது ஸுப்ரதிஷ்டிதம்" என்று உபக்ரம முள்ளது. நம்பிள்ளை யருளிச்செய்த பொருளைப் 'பிறர் சொல்லும் பொருள்' என்பதும், அதனை வாக்யந்யாய விருத்தமென்பதும் அப்ராமாணிகமென்பதும் ந்ருஸிம்ஹ ப்ரியாவுக்கு மஹாப்ரியமாக வுள்ளது.

இதற்கு மேல் மற்றொன்றும் காணவேணும்; "ஈட்டிலுள்ள தே பூயிஷ்டாமென்கிற விலக்ஷணாந்வயம் ஸம்ப்ரதாயாகதமன்று; புதிதாகத் தோன்றியதே என்பது வ்யக்தம்..." "நஞ்சீயர் விவரணம் வரையில் இந்த ச்ருதி உதாஹரிக்கப்படவில்லை. பிறகு முழுமந்த்ரத்தையும் பராமர்சிக்காதே 'பூயிஷ்டாம் தே' என்பதையே புத்தியில் வைத்து தவ ஸுஜ்ஞா ஹுயிஷ்டா என்று சிலர் ஆபாதமாகச் சொன்னதை" என்றிப்படியெல்லாம் மனம் போன போக்கில் எழுதப்பட்டிருக்கின்றது. ஒன்று விடாமல் எல்லாவற்றுக்கும் விரிவாகவே விடை கூறுவோமிங்கு.

"ஈட்டிலுள்ள அர்த்தம் ஸம்ப்ரதாயாகதமன்று, புதிதாகத் தோன்றியதே" என்றதற்கு— முன்னம் சொல்லுகிறோம்: பட்டருடையவும் நம்பிள்ளையினுடையவும் ப்ரஜ்ஞா ப்ரதிபாவிலஸிதங்கள் லோக விலக்ஷணமென்பது ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். இவ்விருவரும் அருளிச்செய்யும் பொருள்கள் ஸ்வகபோல கல்பிதமென்றாலும் மூவுலகும் போற்றத்தக்கவை யென்பது ஸ்ரீ வைஷ்ணவேதரர்களின் கோஷ்டியிலும் ஸம்ப்ரதிபந்நம். * புராணமித்யேவ ந ஸாது ஸர்வம் * என்று காளிதாஸன் சொன்னதை * तदात्वे नूतनं सर्वमायत्यां च पुरातनम् * என்று அநுபாஷித்தார் தேசிகர். யதிராஜஸப்ததியில் * யதீக்ஷ்மாப்ருத் த்ருஷ்டம் மதமிஹ நவீநம் * என்று பிறர் க்ஷேபிப்பதாக வைத்து, 'तदपि किम्'= எம்பெருமானார் தரிசனம் நவீனமாகவே யிருக்கட்டும்; அதனாலென்ன குறை? பிறருடைய மதம் மிகப் புராதனமாகவே யிருக்கட்டும், அதனால் என்ன ஏற்றம் வந்திடும்? என்றார் தேசிகர். அர்த்த ஸ்வாரஸ்யமொன்றுதான் கணிசிக்கத் தக்கதே யொழிய நவீனம் புராதனம் என்கிற வாதம் நிஷ்ப்பலம் என்று முடிக்கப்பட்டிருக்கிறது. நிற்க. இவ்விடத்தில் இந்த நவீனர்களுக்கு ஒரு அபூர்வ விஷயம் உணர்த்துகிறோம்.

திருவாய்மொழியில் (7–5–1.) * கற்பாரிராமபிரானையல்லாலென்னும் பாசுரத்தில் * நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்பாலுக்குய்த்தனன் நான்முக

ஞர் பெற்ற நாட்டுளே * என்பதற்கு ஆருயிரப்படி முதலிய நான்கு மஹாசார்ய வியாக்கியானங்களில் ஏகரீதியாக அர்த்தம் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றது.

(ஆருயிரப்படி)— "ப்ராக்ருத வஸ்துக்களை தாரகபோஷக போக்யமாயிருக்கக் கடவ இப் ப்ரக்ருதி மண்டலத்திலே வைத்துக் கொண்டு திருவயோத்யா நகரியிலே வர்த்திக்கிற உ ர்வாதி நிகில ஜந்துக்களையும் கர்மயோகாத்யுபாயம் பண்ணுதிருக்கச் செய்தேயும் திருநாட்டிலுள்ளாரைப் போலே தன் திருவடிகளே தாரக போஷக போக்யமாக்கியருளின இம் மஹா குணத்தை யுடையனுயிருந்த இராம பிரானையல்லால் மற்றும் கற்பரோ?"

(ஒன்பதினுயிரப்படி)— "திருவயோத்யையிலுண்டான ஸகல பதார்த்தங்களையும் நிர்ஹேதுகமாக ஸ்வஸம்ச்லேஷ விச்லேஷைக ஸு க துஃக்கராம்படி பண்ணியருளின உபகார சீலனுன ராமனை—"

(இருபத்திநாலாயிரப்படி)— "ஸ்தாவர ஜங்கமாத்மகமான ஸகல பதார்த்தங்களையும் தன் ஸம்ச்லேஷ விச்லேஷமே ஸு கதுஃக்கமாம்படி பண்ணினுன்,"

(ஈடு)— "திருவயோத்யையிலுண்டான ஸகல பதார்த்தங்களையும் நிர்ஹேதுகமாக ஸ்வஸம்ச்லேஷ விச்லேஷ ஸு க துஃக்கராம்படி பண்ணியருளின உபகாரசீலனுன......"

ஆக ஸகல வ்யாக்கியாதாக்களும் ஒருமிடறுகத் திருவுள்ளம் பற்றின அர்த்தம் இன்னதென்று ஸ்பஷ்டமாயிற்று. * நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்பாலுக்கு உய்த்ததாவது—* விஷயே தே மஹாராஜ! ராமவ்யஸநகர்சிதா:, அபி வ்ருக்ஷா: பரிம்லாநாஸ் ஸபுஷ்பாங்குரகோரகா: * இத்யாதிகளாலே ப்ரதிபாதிதமான ஸ்வபாவ விசேஷத்தை விளக்கையே யொழிய மோக்ஷப்ரதானமன்று. மோக்ஷப்ரதானமென்கிற பொருளைப் பிள்ளான் முதலான ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றவில்லையென்பது ஸ்பஷ்டம். இப்படியிருக்க, தூப்புல்பிள்ளை த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளியில் இப்பாசுரத்திற்காக இட்ட ஸம்ஸ்க்ருதம் எப்படியிருக்கிறதென்று பார்ப்போம்; "साकेते मुक्तिदानात्— ஸாகேதே முக்திதாநாத்" என்றுள்ளது. * அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி * என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரத்தின் பொருளையும் இப் பாசுரத்தின் பொருளையும் தேசிகர் ஒன்றுகக் கருதி 'ஸாகேதே முக்திதாநாத்' என்று * நற்பாலுக்குய்த்தனனென்றது மோக்ஷப்ரதானம் பண்ணினபடியைச் சொல்லுகிறதாக வைத்து ச்லோகமியற்றிவிட்டார். நஞ்சீயர் முதலானுர் அருளிச்செய்தது இருக்கட்டும். ஆருயிரப்படியில் பிள்ளான் அருளிச்செய்ததை மாத்திரம் நெஞ்சில் கொண்மின். எதிராசர் பேரருளால் பிள்ளானருளிச்செய்த பொருளுக்கு முரணுக (ஸாகேதே முக்திதாநாத்) என்று மோக்ஷப்ரதானத்தை இப்பாட்டின் ப்ரமேயமாக ஸத்ஸம்ப்ரதாயஸித்தரான தூப்புல்பிள்ளை அருளிச் செய்யக் காரணம் யாதென்று விமர்சிக்கவேணும். விமர்சகுசலர்கள் இங்கே நிர்ணயித்திருப்பதாவது, திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படியுரையருளிச்செய்த வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் தேசிகருக்கு ஸமகாலஸ்தர். தேசிகரைவிட பதினேழுவயது முற்பட்டவர் என்றும் ஆப்தர்கள் நிரூபித்திருக்கிறுர்கள். தேசிகர் பரமபதித்தது ஸௌம்ய வருஷத்தில். அதற்கடுத்த ஸாதாரண வருஷத்தில் மணவாள மாமுனிகளின் திருவவதாரம். மாமுனிகள் உபதேசரத்தினமாலையிலும் மற்றும் ரஹஸ்ய வியாக்கியானங்களிலும் வாதிகேஸரி ஜீயருடைய க்ரந்தங்களைப்

பற்றிப்பலகால் ப்ரஸ்தாவித்திருக்கையாலே இது கொண்டு அந்த ஜீயர் தேசிகருடைய ஸமகாலத்தவர் என்பது அறுதியிடப்பெறும். அப்போது அந்த ஜீயருடைய க்ரந்தங்கள் தேசிகருக்கும், தேசிகருடைய க்ரந்தங்கள் அந்த ஜீயருக்கும் எட்டியிருந்தன வென்பதும் ஆராய்ச்சியினால் நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. அந்த ஜீயர் உபய பாஷைகளிலும் க்ரந்தங்கள் இயற்றியவர். அவரிடத்திலும் தேசிகர் மிகுந்த கௌரவப்ரதிபத்தி வஹித்திருந்தவர். அந்த ஜீயருடைய பன்னீராயிரப்படியையும் தேசிகர் உபஜீவித்திருக்கிறாரென்பது தேறியிருக்கிறது. அவர் * கற்பாரிராமபிரான் பாசுரவுரையில், பிள்ளான் முதலானோர் செய்தருளிய வியாக்கியானத்திற்கு முரணாக மோக்ஷப்ரதானப் பொருளைப் பணித்துள்ளார். அதைப்பார்த்து அப்படியே தேசிகர் *ஸாகேதே முக்திதாநாத் * என்று ச்லோக மியற்றிவிட்டார் என்பதே தத்துவம்.

ஆனால் இதை நவீனர்கள் எளிதாக இசைய மாட்டார்கள். கையைக்காலை வீசி ஆர்ப்பாடகம் செய்வர்கள். எதிலும் விபரீதவழியைப் பற்றிக்கொண்டே போராடுவது நவீனர்களின் செயலாதலால் இவ்விஷயத்திலும் விபரீதங்கள் பேசிக் கனமாகப் போராடுவர்கள். அதற்கு நாம் இடம் கொடுக்கவில்லோம். வாதிகேஸரி ஜீயரைப் பற்றி இங்குச்செய்த ப்ரஸங்கத்தை அறவே விட்டிடுவோம். அவருடையவுரையைப் பாராமல் தேசிகர் ஸ்வதந்திரமாகவே * ஸாகேதே முக்திதாநாத் * என்று ச்லோக மிட்டாரென்றே ஒப்புக்கொள்வோம். ஸத்ஸம்ப்ரதாய ப்ராப்தமான அர்த்தத்தைப் பிள்ளானருளிச் செய்திருக்கிறாரென்பது நிர்விவாதமான விஷயம். அந்த பிள்ளானுரையை அப்புள்ளார் திருவடிகளில் தேசிகர் காலக்ஷேபம் கேட்டிருக்கிறாரென்பதும் உள்ளது. அதிலுள்ள அர்த்தங்களெல்லாம் தேசிகன் திருவுள்ளத்தில் அப்படியே தேங்கியிருக்குமே. * புநருச்சாரணாகாங்க்ஷீ பதாநாம் வேஷ்டநே பரம் * என்று ஆசார்ய சம்புவில் கூறியபடி வேதங்களை யெல்லாம் ஏகஸந்தையில் கண்டஸ்தமாக்கி நித்யாநுஸந்தானத்தில் கொண்டிருந்தாரென்பதில் ஸந்தேஹமுண்டோ? அப்படி கண்டஸ்தமாக்கிக் கொண்டும் சிரஸா வஹித்துக் கொண்டுமிருக்கிற திருவாறாயிரப் படியிலுள்ள பொருளைத் தள்ளி வேறொரு பொருளை இவர் கொண்டது ஏன்? இது ஸம்ப்ரதாயாகதமான பொருளன்றே, புதிதாகத் தோன்றிய பொருள் தானே, ஸதாசார்ய பரம்பராகத ஸத்ஸம்ப்ரதாயார்த்த நிஷ்டர்களான பெரியார்க்கு இது வர்ஜநீயந்தானே— என்று சிலர் சொல்லப் புறப்பட்டால் அப்போது இந்த நவீனர்கள் என்ன ஸமாதானம் சொல்லுவர்களோ அதுவே இங்குமாகக் குறையுண்டோ? வஸ்துதஸ்து * ஸாகேதே முக்திதாநாத் போன்றதன்று இவ்விஷயம். ஆனாலும் தூஷகர்களுக்கு இது பொருத்தமான நிதர்சனமாகக் குறையில்லை. ஸம்ப்ரதாயாகதமன்றிக்கே புதிதாகத் தோன்றிய பொருள்களிலேயே வாஸனை பண்ணிப் போருமிவர்களுக்கு ஸத்ஸம்ப்ரதாய ஸித்தார்த்தங்களும் புதியனவாகவே தோற்றுதல் வியப்பன்றே.

ஸாக்ஷாத்ஸ்வாமி யென்பவர் * பூயிஷ்டாம் தே என்கிற விடத்திற்கு ஈட்டிலுள்ள பொருளையே தம்முடைய வியாக்கியானத்தில் பொறித்து வைத்தார் என்கிற வுண்மையை யெடுத்துக் காட்டினதற்கு இந்த தாதாசார்யர் பதிலெழுதினர்— ஸாக்ஷாத் ஸ்வாமி அந்த அர்த்தத்தில் ஆதரம் கொண்டு எழுதினரல்லர்; இப்படி ஒரு

விவரணத்தைப் பூருவர்கள் செய்திருக்கின்றார்களென்று ஜ்ஞாபித்தபடியே யொழிய வேறில்லை— என்று. இப்படி ஸமாதானம் சொல்லுவது அப்ராமாணிகமென்று அழகிய மணவாளன் 1-ல் வெளியாகியிருந்தது. அதற்கு மேல் இப்போது வெளி வந்திருக்கிற ஸமாதானம் யாதெனில்; தமக்கு அபிமதமான பொருளை அபிமதமென்று வ்யக்தமாகக் காட்டாமலே அப்படியே எழுதிவைப்பதும் க்ராந்திக சைலிதானென்று ஸோதாஹரணமாகக் காட்டப் பட்டிருக்கிறது. ஷடர்த்த ஸம்க்ஷேபத்திலிருந்து ஒரு விஷயமும், ஆத்மஸித்தியிலிருந்து ஒரு விஷயமும் காட்டியிருக்கிறது. இதைப்பற்றி மிக விரிவாகச் சொல்ல வேண்டியவை யுண்டு; அவை பிறகு வெளிவரும். இப்போது ஸஹ்ருதயர் ஸமாதானம் கேண்மின்; தூஷிக்க வேண்டிய பரமதத்தை ஸ்வமதம் போல் காட்டி யெழுதலாமென்கிறவர்கள் ஒரு ஸ்ரீஸூக்தியையும் தங்களுக்கு ஸாதகமாக எடுத்துக்காட்ட நிஸ்ஸங்கோசமாக வெளிவர முடியாது. ஸ்வாபிமத ஸாதகமாக எந்த ஸூக்தியை எடுத்துக் காட்டினாலும் 'ஐதம் உதாஹரணாபிஹிதம்; ந து ஸ்வாபிமதம்' என்று பிறர் சொல்லத் தடையேயிராது. அப்பய தீக்ஷிதர் எழுதியிருந்தார்— 'உத்தம காவ்யங்களெல்லாம் வாச்யார்த்தத்தை விட்டு வ்யங்க்யார்த்தத்தையே உயிராகக் கொண்டிருக்கும்; ஸ்ரீராமாயணம் உத்தம காவ்யமாகையாலே வாச்யார்த்தமான விஷ்ணுபாரம்யத்தை விட்டு வ்யங்க்யார்த்தமான சிவ பாரம்யத்தையே உயிராகக் கொண்டது' என்று. அதற்கு மேல் ஒருவர் எழுதினார்; 'அது வாஸ்தவமே; உம்முடைய காவ்யமும் உத்தம காவ்யமாதலால் இதுவும் வ்யங்க்ய ப்ரதானமாகத் தானே யிருக்கத் தகும்; இதற்கு சிவ பாரம்யம் வாச்யார்த்தமாயிருந்தாலும் விஷ்ணு பாரம்யமே வ்யங்க்யார்த்தமாகி அது தான் உயிர் என்று கொள்ளீர்' என்று. இப்படியே வார்த்தைகள் நிஸ்ஸீமமாய் வளர்ந்து செல்லலாம்.

ஈட்டை ஸாக்ஷாத் ஸ்வாமி ஆதரித்ததனால் ஓர் ஏற்றமில்லை, அநாதரித்ததனால் ஒரு தாழ்வில்லை. ப்ரஸக்தி வந்த படியால் அவரைப் பற்றி ஒன்று தெரிவிப்போம். இவர் திருவாய்மொழி எட்டாம் பத்தில் *நன்றாய் ஞானம் கடந்து போய்* என்ற பாட்டில் 'நல்லிந்திரியம்' என்று நிஷ்கல்மஷமாக வழங்கி வரும் பாடத்தை ஏதோ ப்ரம விசேஷத்தால் 'நல்லீந்திரியம்' என்று தாம் க்ரஹித்து விட்டதுமல்லாமல் அதற்கு ஓர் இலக்கணமும் எழுதிவிட்டார். அச்சாகியிருக்கிறதே; எடுத்துப் பார்க்கலாமே. "ஸுதராந்தவிஜ்ஞானஹ்ருதயா வாக்ரஹநிரீக்ஷணாதபம் தோஷ:" என்ற ந்யாய ஸித்தாந்தஜ்ஞ ஸூக்தி இவ்விடத்திற்கு மிகவும் பொருத்தமாகும். அவர் * பூயிஷ்டாம் தே என்ற விடத்திற்கு எழுதிய வர்த்தம் ஸ்வாபிமதமாகவே யிருக்கட்டுமே.

"முழு மந்த்ரத்தையும் பராமர்சிக்காதே * பூயிஷ்டாம் தே * என்பதையே புத்தியில் வைத்து..." என்றெழுதியுள்ள தூஷகருடைய அபிப்பிராயம் இன்னதென்பதை ந்ருஸிம்ஹப்ரியா ஸம்பாதகர்களே நேரில் கேட்டறிய வேணும். முழு மந்த்ரத்தையும் பராமர்சித்தால் இது அக்நிபரமே யொழிய பகவத்பரமன்றென்று தெரிய வரும் என்பதே இவருடைய எண்ணம். இப்படிப் பட்ட விவர் வேதாந்த காந்தார ஸஞ்சாரம் பண்ண ஆசை கொள்ளுகிறார். * வரணம் பவித்ரம் விததம் புராணம் * இத்யாதி வாக்யங்களை சக்ராங்கனத்திற்கு ப்ரமாணமாக வெடுத்துக் காட்டின தேசிகாதிகளை நோக்கிப் பிறர் எழுதியிருப்பவை ஸுப்ரஸித்தம். * சரணம் பவித்ரமித்

யாதி வாக்யமானது ஸாம்கத்தில் ஓதப் பட்டிருக்கிறது. தபஸ், ச்ரத்தா, ஸத்யம, மாநஸ், சரணம் என்கிற ஐந்து ஸ்வர்க லோக த்வாரங்களைப் பற்றியே அங்கு ஏதோ படித்திருக்கிறது; ஸுதர்சந பாஞ்சஜந்ய ப்ரஸ்தாவ ப்ரஸக்தியே அங்குக் கிடையாது; தாம்பூல பஞ்சாதியை மாத்திரமறிந்த வைஷ்ணவர்கள் மனம் போனபடி அர்த்தஞ் சொல்லுகிறார்கள்— என்று பரிஹஸித்து எழுதி வைத்திருப்பார் பலருளர். அவர்களோடு இவருஞ் சேர்ந்து தாளம் போட்டால் தடுப்பாராருமில்லை.

இவ் விஷயத்தின் நிகமனம். * பூயிஷ்டாம் நம உக்திம் தே விதேம * என்றந்வயித்துப் பொருள் கொள்வதில் எவ்விதமான அநுபபத்தியும் கிடையாது. ஆனால், * தே பூயிஷ்டாமென்று அந்வயித்துப் பொருள் கொள்வதில் த்ரமிடோபநிஷதநுக்ரஹம் அபரிமிதமாக வுண்டு. * சந்த்ரகாந்தாநநம் ராமம் * என்பதற்கு चन्द्रवत् कान्तम् आननं यस्य என்று கொள்வாருமுளர்; चन्द्रात् कान्तमाननं यस्य என்று கொள்வாருமுளர். இரண்டும் ஸ்வாயிதமே. ஆயினும், சந்த்ரன் போல'ழகிய முகமுடையவன் இராமன் என்று கொள்வதைவிட சந்திரனைக் காட்டிலும் அழகிய முகமுடையவனிராமன் என்று கொள்வதில் ரஸவிசேஷமுணர்வர்கள் பாக்யாதிகர்கள். சந்த்ரவத் காந்தம் என்னலாமே தவிர, சந்த்ராத் காந்தமென்னவே கூடாதென்றும், அதற்கு வியாகரணம் இடங்கொடாதென்றும் வாது செய்பவர்கள் யாவஜ்ஜீவம் செய்துகொண்டிருக்கலாம். அதற்கு யாரும் ப்ரதிவாதம் செய்யார். இந்த * பூயிஷ்டாம் தே விசாரமானது முதலில் எதற்காகத் தோன்றிற்று? என்னவிதமாய் முடிந்தது? என்பதையே ரஸிகர்கள் நோக்கவேண்டும். ஸ்ரீ ராமாநுஜன் தனிமலர் 1-ல் ஸதுபதேசசிக்ஷையில்— இந்த ச்ருதிக்கு நம்பிள்ளை காட்டும் சீரிய பொருள் இப்படிப்பட்டது; இப்பொருளை நவீனர்கள் தூஷிக்கப் பிறந்தவர்களே யொழிய பூஷிக்கப் பிறந்தவர்களல்லர்; இவர்களுக்கும் ஈட்டுக்கும் என்ன ஸம்பந்தம்? என்று அண்ணாஸ்வாமி காட்டியிருக்கிறார். ஆமாம், நாங்கள் அப்பொருளை தூஷிக்கப் பிறந்தவர்களே; நம்பிள்ளையையும் தூஷிக்கப் பிறந்தவர்களே; ஈட்டுக்கும் எங்களுக்கும் யாதொரு ஸம்பந்தமும் இல்லைதான் என்று இவர்கள் முடித்துக்கொண்டார்கள், நன்று நன்று மிக நன்றே.

'தேசிகர் செய்யாததும் இதர ஆசார்யர்கள் செய்ததுமான அர்த்தத்தை நாங்கள் ஒப்புக்கொள்வதில்லை' என்பதே இவர்களின் ஆக்ரஹ ஸார ஸர்வஸ்வமாக நிற்கிறது. இது மிகவும் கொண்டாடத்தக்க பக்திவிசேஷமே. இவர்கள் இவ்வத்யவஸாயத்திற்கேற்ப * ஸாகேதே முக்திதாநாத் * என்கிற தேசிகச்லோகத்தை நிதியாகக் கொண்டு, அவ்விதமான அர்த்தம்பண்ணாமல் வேறு அர்த்தம் பண்ணின ஆறாயிரப் படியையும் தூஷித்து நிற்பதே யுக்தமாகும்.

ஸ்ரீ:

# "ரங்காஸ்தாநே."

[ஸ்ரீ. வெ. ஸ்ரீ.]

பகவத்த்யாந ஸோபானத்தின் முடிவில் "रङ्गास्थाने रसिकमहिते रञ्जिताशेषचित्ते विद्वत्सेवाविमलमनसा वेङ्कटेशेन क्लृप्तम्— ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதா சேஷசித்தே வித்வத்ஸேவா விமலமநஸா வேங்கடேசேந க்லுப்தம்" என்பது தேசிகருடைய ச்லோகம். இதை அந்வயிப்பதில் உண்டாகியிருக்கிற விவாதம் ஸம்ப்ரதாய பேதத்தில் சேர்ந்ததன்று. ஸம்ஸ்க்ருத வித்வான்களாயுள்ள யாவரும் எந்த மதத்தினரும் இந்த விவாதத்தில் கலந்துகொள்ளலாம். இதைப்பற்றி, நிகழும் ஆவணி மாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில் வெளிவந்திருக்கிற விதண்டாவாதம் மிகவும் வெறுக்கத்தக்கது. [இதுவும் D. T. தாதாசார்யருடைய வாதமே.] ஸ்ரீ ஸூக்திகளை நாசஞ்செய்வதற்கென்றே பத்ததீக்ஷரான விவர் யதார்த்தவாதிகளைப் பழிப்பது யுக்தமே.

இந்த ச்லோகத்தில் (ரஸிகமஹிதே) என்றவிடத்து ரஸிகபதத்தினால் விவக்ஷிதர் யாவர்? (வித்வத் ஸேவா விமல மநஸா) என்றவிடத்து வித்வத் பதத்தினால் விவக்ஷிதர் யாவர்? என்கிற விசாரம் வெகுதூரத்திலிருக்கட்டும். அதைப் பற்றிப் பிறகு விமர்சிக்கலாம். ச்லோகத்தின் அந்வயக்ரமநிஷ்கர்ஷமே முக்கியமான முதல்விஷயம். இப்போது நாம் விமர்சிக்கிற எதிரியின் வியாஸத்தில் "இனி இவர்கள் கூறும் பொருளாவது" என்றெழுதிவிட்டு, உடனே "ரங்காஸ்தாநஸ்தித... என்பதிலுள்ள குற்றங்களாவன" என்று தொடங்கி ஸ்வதூஷணமே எழுதியுள்ளது. "இவர்கள் கூறும் பொருளாவது" என்ற வாக்யம் மொட்டையாய் நிற்கிறது. இப்படி அநந்விதமாயெழுதக் கற்ற அவ்யுத்பந்நர்கள் வாக்யாந்வய சோதகர்களாம். அஸ்து. விஷயத்திற் செல்வோம்.

1. 'ரங்காஸ்தாநே என்பது காரகம்; க்ரியையோடுதான் அந்வயிக்கும். க்ரியாபிந்நமான வித்வத்பதார்த்தத்தில் அந்வயிக்காது' என்பது முதல் தூஷணம், ஸஹ்ருதயஸமாதானமே சொல்லுகிறோம். ரங்காஸ்தாநே என்கிற காரகம் க்ரியையில்தான் அந்வயிக்கிறது, ச்ரூயமாணக்ரியையில்தான் அந்வயிக்கிறது, (எதிரி சொல்லுகிறபடி வ்யவஹித க்ரியையிலன்றிக்கே) ஸந்நிஹிதக்ரியையில்தான் அந்வயிக்கிறது. அதாவது 'ஸேவா' பதார்த்தமான ஸேவநக்ரியையில் அந்வயிக்கிறது. ஸ்ரீரங்கத்தில் வித்வத்ஸேவை பண்ணி விமலமநஸ்கராகப்பெற்ற வேங்கடேசராலே— என்று ஸ்வரஸமாக அந்வயித்து ஸ்ரீரங்கத்திலுள்ள வித்வான்களை யடிபணிந்து நிஷ்கல்மஷ ஹ்ருதயராகப் பெற்ற பெருமையைத் தெரிவித்ததாயிற்று. ஸந்நிஹிதமான ஸேவநக்ரியையை விட்டு வ்யவஹிதமான ரசநாக்ரியையில் அந்வயிப்பதாகச் சொல்லுவது சாஸ்த்ரஜ்ஞகோஷ்டியில் விலை செல்லாது. ச்லோகமானது "ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே

வித்வத்ஸேவாவிமலஹ்ருதயோ வேங்கடேசோ மஹாத்மா." என்று இவ்வண்ணமிருப்பதாக வைத்துப் பார்ப்போம். இப்படிப்பட்ட ச்லோகஸந்நிவேசத்தில் எவ்வித மான அவத்யமும் சொல்ல முடியாதன்றோ. 'இது பூர்வார்த்தம்; உத்தரார்த்தம் தெரியவேணுமே' என்னில்; இப்படிப்பட்ட வேங்கடேசா மஹாத்மா, யாத்ராமார்க்கமாய் ஸத்யமங்கலம் போய்ச் சேர்ந்தார் என்கிறது உத்தரார்த்தத்தில் என்று கொள்ளீர். ஆக, அநவத்யமாக நாம் காட்டும் ச்லோகஸந்நிவேசத்தில் ரங்காஸ்தாநே என்கிற காரகம் எந்த க்ரியையில் அந்வயிக்கிறதென்று இந்த ஸர்வஜ்ஞர் ஸாதிக்கவேணுமே. அச்ருதமான வொரு க்ரியையில் நாம் அந்வயிப்பதாக வைத்து "அது அச்ருதம்; அத்யாஹாரமெனில் அதுவே ஒரு குற்றம்" என்கிறார். அந்தோ! இது மிகவும் சோசநீயமான தூஷணம். அத்யாஹாரம் அத்யாஹாரத்வேந தோஷமன்றென்பதை சாஸ்த்ரஜ்ஞர்களிடம் தெரிந்துகொள்வது. ந்யாயபாஸ்கர மங்களச்லோகத்தில் அத்யாஹாரம் தோஷமென்று ப்ரபலமாக தூஷித்த சாஸ்த்ரியொருவர் பங்கப்பட்டிருப்பதை இவரறியார். ஸ்ரீ பாஷ்யத்தில் "इच्छाया इष्यमाणप्रधानत्वात् इष्यमाणं ज्ञानमिह विधीयते" என்றவிடத்தில் 'अविधेयत्वेऽपि' என்று அத்யாஹாரம் செய்துகொண்டால்தான் பொருந்துமென்று மஹா வித்வான்கள் எழுதியுள்ளார்கள். * दिलीपानन्तरं राज्ये तं निशम्य प्रतिष्ठितम् * என்ற ஸுப்ரஸித்தமான ரகுவம்சச்லோகத்தில் நிசம்ய என்கிற ல்யபந்தம் எங்கே அந்வயிக்கிறதென்று பார்க்க வேணும்; இது ஒரு க்ரியையிலேயே அந்வயித்துத் தீர வேணும். உத்தரார்த்தத்தில் * ஹ்ருதயே க்ந்ரிவோத்தித: * என்றுள்ளது. உத்திதி க்ரியையில் அந்வயித்தால் ஸமாநகர்த்ருகத்வம் ஹதமாகிறது. அக்நியினிடத்தில் நிசமநத்தை உபசாரேண விவக்ஷித்து ஸமாநகர்த்ருகத்வ ஸம்பாதநம் செய்கிறோமென்பதும் மற்றொன்று பேசுவதும் எளியவழியன்று. 'வர்த்தமாநாநாம்' என்றொரு பதம் அத்யாஹரித்து 'நிசம்ய வர்த்தமாநாநாம் ராஜ்ஞாம்' என்று தான் அந்வயித்துக்கொள்ளவேணும். இப்படிகளிலே பல்லாயிரம் அத்யாஹாரங்கள் அநவத்யங்களாக ஸுப்ரஸித்தம். ப்ரக்ருதத்தில் அத்யாஹார ப்ரஸக்தி அணுமாத்ரமுமில்லை.

2. '[illegible]' என்கிற ந்யாயவிரோதம் மற்றொரு குற்றம்' என்கிற இரண்டாம் தூஷணமும் அஸமஞ்ஜஸம். ஸந்நிஹிதாந்வயமே ப்ரதாநாந்வயமாகும். அந்த ஸுஹ்ருஹிதமான அந்வயமேதான் நாம் சொல்லுவது. வ்யவஹிதாந்வயம் சொல்லும் தனக்கே தான் இக்குற்றம் ஸுலக்னமாமென்று தெளிக.

3. '[illegible]' என்கிற ந்யாயவிரோதம் மற்றொன்று' என்ற மூன்றாம் தூஷணமும் பல்பஜம். ஏகதேசாந்வயத்தைப் பற்றி மேலேயும் சில எழுதியுள்ளார். எல்லாம் விபரீதம். தேவதத்தஸ்ய குருகுலம், ருத்தஸ்ய ராஜபுருஷ: என்ற இரண்டு உதாஹரணங்களையெடுத்துக்காட்டி நாமிசையும் அந்வயம் ருத்தஸ்ய ராஜபுருஷ: போன்றது என்று தூஷித்திருக்கிறார். இது வ்யுத்பத்தியின் அத்யந்தாபாவத்தை நன்கு காட்டுமென்பதை ஸ்பஷ்டமாக ரூதலிக்கிறோம் காண்மின். ஏகதேசாந்வயத்தை இரண்டு வகையாக சாஸ்த்ரகாரர்கள் பிரித்திருக்கிறார்கள்; [illegible] ஸ்தலத்தில் ஏகதேசாந்வயம் சாஸ்த்ரீயமென்

றும் அஹேதுஸம்பந்தேந. அந்வயஸ்தலத்தில் ஏகதேசாந்வயம் அசாஸ்த்ரீயமென்றும் வ்யுத்பத்தி வாதாதிகளில் முடித்திருக்கிறார்கள். வைத்ருஸ்ய ஸ்மாரகாணாம் என்பது ஹேதுஸம்பந்தேந அந்வயஸ்தலமாதலால் இது ஸாது ப்ரயோகம். தைலஸ்ய ராஜஜாதஜ: என்பது அஹேதுஸம்பந்தேந அந்வயஸ்தலமாதலால் இது அபப்ரயோகம். 'ரங்காஸ்தாநே வித்வத்ஸேவாவிமலமநஸா' என்கிற ப்ரக்ருதஸ்தலம் அபேத ஸம்பந்தேந அந்வயஸ்தலமென்று பாலிசனும் சொல்லான். இங்கு விசேஷணவிசேஷ்ய பாவாபத்தி இடையாமையாலே பேதஸம்பந்தேந அந்வயஸ்தலமிது. இது வைத்ருஸ்ய ஸ்மாரகாணாம் போன்றதேயொழிய தைலஸ்ய ராஜஜாதஜ: போன்றதாவதற்கு அவகாசலேசமும் கிடையாது. இது ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்த விஷயமன்று. யாரைக் கேட்டாலும் ஆலோசியாமல் உடனே உண்மையுரைப்பர். இப்படி சாஸ்த்ரஸம்மதமான ஏகதேசாந்வயஸ்தலம் ஸம்ஸ்க்ருத வாங்மயங்களில் பாரேவராயம் கிடைக்கும். 'தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே நிவேசிதாத்மா கதமந்யதிச்சதி' என்ற ஆளவந்தார் ஸ்ரீ ஸூக்தியைக் கொள்வோம். இங்கு பாதபங்கஜே என்ற ஸப்தமிக்கும் 'நிவேசித' என்ற ஏகதேசத்திற்குந்தான் அந்வயம். வேறு அந்வயம் அஸம்பாவிதம். 'ஒருகாலும் ஏகதேசத்தில் அந்வயியாது. மேலேயுள்ள இச்சதியில்தான் அந்வயிக்கும்' என்று வாதிக்கவேண்டுமிந்த ஸர்வஜ்ஞர். இந்த ப்ரஜ்ஞாவிலஸிதத்திற்குக் கண்ணெச்சில் படாமே ஆலத்தி வழிக்க வேண்டு மத்தனை. அபீதிஸ்தவத்தில்

2. * श्रियाऽध्युषितवक्षसः संविदः मनसि मे जागृयुः* என்றுள்ளது. இங்கும் ச்ரியா என்ற காரகம் (அத்யுஷித) என்ற ஏகதேசத்தில்தான் அந்வயித்தாகவேண்டும். 'இல்லையில்லை, ஜாக்ருயு: என்ற க்ரியையில்தான் அந்வயிக்கிறது' என்று இவர் எழுதிக்கொண்டேயிருக்கட்டுமே.

3. * அதவா க்ருதவாக்த்வாரே வம்ஶேऽஸ்மிந் பூர்வஸூரிபி: * என்ற ரகுவம்ச ச்லோகத்தையும் எடுத்துக்கொள்வோம். இவ்விடத்தில் ஸூரிபி: என்ற த்ருதீயாகாரகம் க்ருத என்கிற ஏகதேசத்தில்தான் அந்வயிக்கிறது. இவ்விதமில்லை என்று வேறு எதையாவது எழுதிப் பார்க்கலாமே.

இவரைத் தெளிவிக்க அநவத்யப்ரயோகங்கள் இன்னமும் பல காட்டுகிறோம்;

1. तटाके पुष्पापचयव्यग्रेण गजेन्द्रेण
2. विद्यालये काव्यपाठनिरतेन बालेन
3. आपणे लवणक्रयणव्यापृतेन चैत्रेण
4. उद्याने कदलीफलखादनतत्परेण मैत्रेण

இப்படி பல்லாயிரம் காட்டலாம். இவ்விடங்களிலெல்லாம் மேலே ஒரு க்ரியாபதம் இருக்கவே போகிறது. ஆனாலும் வாக்யாதியிலுள்ள காரகங்கள் அந்த க்ரியையை எதிர்பார்த்திருக்க ப்ரஸக்தியே கிடையாது. ஸந்நிஹிதமாயுள்ள [ஏகதேச] க்ரியையில்தான் அந்வயித்து க்ருத க்ருத்யமாகும். ஸம்ஸ்க்ருதத்தில் ஸ்வல்ப பரிசயமுள்ளவர்க்கும் இது எளிதான விஷயம். இதில் போராடுவதற்கு வீணே ஆக்ரஹமொழிய வேறு ஹேதுவுண்டோ? * बालानां सुखबोधदानकुशलग्रन्थावलीं निर्ममे * என்றால் 'பாலாநாம் என்ற காரகம் ஏகதேசத்தில் அந்வயியாது, நிர்மமே என்கிற க்ரியையில்தான் அந்வயிக்கிறது' என்று போராடுவாரைக் கண்டதுண்டோ? காகிதமும் மசியும் லேகிநியும் கையிலுள்ளதென்று எதைவேணுமானாலும் எழுதிவிடுவதோ?

இந்த ரங்காஸ்தாநே விசாரத்தில் மற்ற விஷயங்கள் கிடக்கட்டும்; விசாரகர்த்தா

வின் ப்ராமாணிகத்வபரீக்ஷை இவ்வொரு விஷயத்தில் முடிவுபெறவேண்டும். இதை முடித்துக்கொண்டு அடுத்த விஷயத்திற் செல்வோம். ரங்காஸ்தாநே என்கிற காரகம் வித்வத் ஸேவா என்ற விடத்து ஸேவாக்ரி யையில் அந்வயிக்க எந்த சாஸ்த்ரம் தடை செய்கிறதென்பதை இவர் நேர்நெறி நின்று நிரூபிக்கவேணும். நாம் சித்திரை மாதத்தில் வெளியிட்டதற்கு இவர் ஆவ ணிமாதத்தில் பதிலெழுதுகிறார். இவர் ஆவணிமாதத்தில் வெளியிட்டபதிலுக்கு நாம் உடனே [ஆவணிமாதத்திலேயே] இதோ பதில் சொல்லியிருக்கிறோம். இவர்இனி ஆடிமாதத்தில் தலைகாலில்லா தபடி ஒன்று எழுதி வெளியிடப்போ கிறார். இதுவே இவருடைய பழக்கமாய் விட்டது.

" ப்ரக்ருதம் ஜைவஸ்ய ராஜஜாதம் ம: என்பது போன்ற ஸ்தலமாகும்; ஆகையால் அந்வயிக்காது."

என்று இவர் எழுதியுள்ளார். இதை இவர் ஸ்தாபிக்க ஏழேழ்பிறவி தவம் புரிந் தாலுமாகாதே. ஜைவஸ்ய என்பது விசேஷ ணபதம். அது (ராஜ) என்கிற விசேஷ்யத்தில் அந்வயிக்க வேணுமென்கிற எண்ணத்தோடு அந்த ப்ரயோகம் செய் யப்பட்டது. அபேதஸம்பந்தேந அந்வயிக் கவேண்டிய இடமாதலால் இது அஸம் பவி. ஆகவே இந்த ப்ரயோகம் துஷ் டம். ரங்காஸ்தாநே என்பது விசேஷண மன்று; ஆகவே அபேதஸம்பந்தேந அந் வய ப்ரஸக்தியில்லை யிங்கு. இது வித்வத் பதத்திலும் அந்வயிக்கலாம், ஸேவா பதத் திலுமந்வயிக்கலாம், விமல மநஸா என் பதிலுமந்வயிக்கலாம். இதுபோல க்லிப்தம் என்பதிலும் அந்வயிக்கலாம், ஆனால் அது வ்யவஹிதமாகையாலும் அவ்வந் வயம் அநர்த்தகமாகையாலும் துஷ்டம். வக்தாவுக்கு அது விவக்ஷிதமேயன்று. திருக்கோவலூருக் கெழுந்தருளி தேஹளீ சஸ்துதி ஸாதித்தார்; ஸ்ரீவில்லிபுத்தூருக் கெழுந்தருளி கோதாஸ்துதி ஸாதித்தார்; இங்ஙனே பலவூர்களில் பல ஸ்துதிகள் ஸாதித்தார். இன்ன இடத்திலே இது இயற்றப்பட்டதென்று ஒன்றிலும் சொல் லியிருக்கவில்லை. ஸ்ரீரங்கத்தில் வந்து வித் வான்களை ஸேவித்து விமல மநஸ்கனுகப் பெற்றேனென்று உள்ளம் பூரித்து அரு ளிச் செய்திருப்பதை இல்லை செய்ய இவ ரார்கொல்? தேசிகர் ஸ்ரீரங்கத்திற்கு வரும் போது ஸ்வாசார்யரான வாதிஹம்ஸாம்பு வாஹரையு மழைத்துவந்தார்; அவரைத் தான் ஸ்ரீரங்கத்தில் ஸேவித்துக்கொண்டி ருந்தார்; அந்த ஸேவையினுல் வீதகல்மஷ மநஸ்கராகப் பெற்றதையே எழுதிவை தார்— என்று வேணுமானுல் சொல்லிக் கொள்ளலாம். இதை யாரும் தடுப்பா ரில்லை. அது மெய்யா பொய்யா என்கிற விசாரம் வேணுமானுல் செய்யலாமே யொழிய வேறு விதமான அநுபபத்தியை இதில் சொல்ல வருவாரில்லை. இதை விட்டு, ரங்காஸ்தாநே என்பது வித்வத் ஸேவையில் அந்வயிக்கவே மாட்டா தென்று முஷ்டிபிடிக்கில் பரித: பரிஹாஸ் யதை தவிர வேறு தேருது. எத்தனை காலமு மெத்தனையூழியும் வாதித்தாலும் இதில் இவர் கை கூப்பி நிற்கவேண்டிய வரே யென்பது திண்ணம்.

அலங்கார சாஸ்த்ரத்தில் பரிகராலங் கார மென்றும் பரிகராங்குராலங்கார மென்றும் இரண்டுண்டு.

' अलङ्कारः परिकरः साभिप्राये विशेषणे '

' साभिप्राये विशेष्ये तु भवेत्परिकराङ्कुरः '

என்பன லக்ஷணங்கள். அபிப்ராய விசே ஷங்களுடன் விசேஷணமிட்டால் அங்கு பரிகராலங்காரமாகும். இங்கு 'ரஸிக மஹிதே, ரஞ்ஜிதாசேஷசித்தே' என்னும் விசேஷணங்கள் ஸ்ரீரங்கத்திற்கு இட்

டவை ஸாபிப்ராயம். ஸ்ரீரங்கத்தில் ரஸிகர்கள் எழுந்தருளி யிருக்கிருர்களென்றும் அது ரஞ்ஜிதாசேஷசித்தமென்றும் சொல்லுவதானது ச்லோகபூரணார்த்தமன்று. அங்கு தாம் ஸேவித்த வித்வான்கள் பரமரஸிகர்களென்றும் அவர்கள் தங்கள் வாக்வைபவங்களாலே அசேஷசித்த ரஞ்ஜநம் செய்துகொண்டு வாழ்ந்தவர்களென்றும் எளிதாகத் தெரிவித்து நிற்கும்.

யதிராஜஸப்ததியில் “ रसपरिमलश्लाघाघोषस्फुटस्फुटभेदनं लवणवणिजः कर्पूरार्घं किमित्यभिमन्यते ” என்றொரு ச்லோகமுள்ளது. இங்கு கர்ப்பூரார்க்கமென்ற விடத்தில் பாடஸ்கலனமுள்ளதென்று விரிவாக நிரூபித்து உண்மையான பாடத்தை அண்ணுஸ்வாமி விளக்கியிருக்கிருர். இது பல வருஷங்களுக்கு முன்பு நடந்த சர்ச்சை. அண்ணுஸ்வாமி விளக்கிய பாடம் இருக்கட்டும். இவரும் இவரைப்போன்றவர்களும் ஆதரித்து வருகிற பாடத்தில் * ரஸ பரிமளச்லாகா கோஷஸ்புடத் புடபேத நத்வரூப விசேஷணமானது கர்ப்பூரார்க்கத்தில் [அதாவது கருப்பூரத்தின் விலையில்] எப்படி அந்வயிக்கிறதென்று இவர் நிரூபிக்கவேணுமே. ரஸத்தையும் பரிமளத்தையும் பற்றின ச்லாகா கோஷமானது பட்டணத்தைப் பிளக்கிறதென்று விசேஷணத்தினுல் தெரிவிக்கப்படுகிறது. ரஸமும் பரிமளமும் கருப்பூரத்திற்கு உண்டேயல்லது அதன் விலைக்குக் கிடையாது. விலையில் அந்வயிக்கும் படியாகவன்றோ மூலஸந்நிவேசமுள்ளது. ऋद्धस्य राजमातङ्गः என்ற நிதர்சநம் இவ்விடத்திற்கன்றோ பொருத்தமாவது. அதுநிற்க. ரஸபரிமளேத்யாதி விசேஷணம் சுவடத்தில் [விலையில்] அந்வயிக்கமாட்டாதாகிலும் கருப்பூரத்தில் அந்வயிக்கவேணுமென்கிற விவக்ஷயினுல்தான் ஸ்வாமி ப்ரயோகித்தார்— என்று இவர்கள் சொல்லித்தீர வேண்டும். அப்படியே, ரஸிகமஹிதே என்றும் ரஞ்ஜிதாசேஷசித்தே என்றுமுள்ள விசேஷணங்கள் வித்வான்களிடத்தில் நேராக அந்வயிக்க முடியாதாகிலும் அங்கு அந்வயிக்கவேணுமென்கிற விவக்ஷயினுல்தான் ஸ்வாமி ப்ரயோகித்தார் என்பதையும் இவர் வாயால் சொல்லித் தீர வேண்டும். கர்ப்பூரார்க்கம் என்ற விடம் ஸார்வாத்மநா அநுபபந்நம், இவ்விடம் ஸர்வாத்மநா உபபந்நம் என்பது விசேஷம்.

“ நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே ” என்றொரு பாசுரம் தேசிகர் திருவாக்கில் வெளிவந்துளதென்பதை இவர் அறியார். அது முநிவாஹநபோக ரஹஸ்யத்திலுள்ளது. முநிவாஹந போகமென்பது அமலனுதிபிரானுக்கு ஒரு ஸங்க்ரஹ வியாக்கியானம். மற்ற திவ்ய ப்ரபந்தங்களை விட்டுத் திருப்பாணுழ்வாருடைய திவ்யப்ரபந்தத்திற்கு எதற்காக வியாக்கியானமிட்டார்? என்கிற விசாரத்தில் நாம் சிறிதும் செல்லவில்லை. இதன் முடிவிலிட்ட பாட்டு என்ன ஆனந்தம்! எவ்வளவு பேரின்பம்! என்ன ப்ரஹ்மானந்தம்! என்ன விநயம்! இப்படியொரு பாட்டு எங்கேனும் கண்டதுண்டா? ஈற்றடியை மாத்திரமெடுத்துக் காட்டினேம்; மூன்ருமடியையுங் காண்மின்— ‘வேண் பெரிய விரிதிரைநீர் வையத்துள்ளே வேதாந்த வாரியனென்று இயம்பநின்ருேம்’ என்பது. உடனே ‘ நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே’ என்கிருர். ‘வேதாந்தாசார்யனென்று நான் விருது வஹிக்கப்பெற்றுவிட்டாலும் அதனுல் செருக்குக்கொண்டு ரஸிகவித்வத் ஸேவா விமுகனுயிருப்பவனல்லேன்; ஹிதாஹிதங்களை நமக்குரைக்க வல்ல

மஹான்கள் எங்குள்ளார் எங்குள்ளாரென்று தேடித் திரிவதே என் பணி' என்று இப்படியன்றே கதறியிருக்கிறார். இதுதானும் ஸ்ரீரங்கத்திலன்றே அருளிச்செய்தது. இங்ஙனே தாம் தமக்கு நிகரற்ற பெருமையாகப் பேசிக்கொண்டதை இவர் வெகு ஆக்ரஹத்துடன் மறுக்கப்பாடுபடுவதும், கிடாம்பியப்புள்ளார் தவிர மற்ற பேர் திருவடிகளில் தலையைத் தாழ்த்தவரேயல்லர் என்பதும் உண்மையில் தேசிகர்க்கு அருந்துதமேயாகும். இதெல்லாம் க்ரமேண விசேஷ ஆராய்ச்சிகளால் நிலைபெறுத்தப் பட்டேதீரும்.

'ஸஜிஹ்யா'. என்பதற்கு இவரோ இவர் வகுப்பினரோ எழுதும் பொருளை மறுப்பாராருமில்லை. அது அந்த ஸத்துக்களை யடிபணியும் பொருளுக்கு ஈஷத்தும் பாதகமன்று. 'स्वबलादुद्धृतयादवप्रकाशः' என்று ஸ்வாமிக்குச்சொல்லும் பெருமையைப் பிறர் மறுத்தாலும் ஸ்வகோஷ்டீ பஹுமானத்தில் குறையில்லையே. இவ்விரிவுகள் இங்கே ஸுதராம் அநபேக்ஷிதம். ரங்காஸ்தானத்திற்கும் வித்வத் ஸேவைக்குந்தான் அந்வயம் பொருத்தமானது என்று உபபாதித்துத் தலைக்கட்டி நிற்கிறோம்.